*Ūḻiyaṉ*

*Malar 16, itaḻ 23*

*December 04, 1936*

Record no. 148

THE OOLIAN

REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 16
இதழ் 23

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2
மலாய் காசு 15



'ஸ்திரீ தர்மாவில்'
மிஸ். மேத்தாப்.



4—12—36

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கக. சென்னை, தாது௵ கார்த்திகை௴ 20௳ வெள்ளி (4-12-1936) இதழ் உக

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடிலாது
சேர்ந்தவர் சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இழிபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
சந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்
நல்லனவெந் நாளும் வாழ்க !

## தனவணிக நாட்டில் ......வீர உணர்ச்சி

'தனவணிக நாடு வீரத்தை யறியாதது; அது அரசியலில் மிகவும் பிற்போக்குடையது' என்று இதுகாறும் கருதப்பட்டு வந்தது. அங்கு சில நாட்களாக நடைபெற்றுவரும் செய்கை அக்கூற்றை உடைத்து வருகிறது. தனவணிக நாட்டில் ஒரு சில பட்டதாரிகளும் பணக்காரர்களும் பொது மக்களைப் படுத்திவந்த பாடு கொஞ்சமல்ல. தங்கள் நன்மை ஒன்றிற்காக நாடு முழுதையுமே பல வகையாலும் துன்புறுத்தி வந்தனர் சிலர். இக்கொடிய நிலைமை போக்கப்படவேண்டும் என மிகப் பலருள்ளத்தில் ஓர் உணர்ச்சி உதித்துக் கொண்டேயிருந்தது. அதற்குத் துணையாக வந்தது ஜில்லா போர்டுத் தேர்தல்.

ஜில்லாப் போர்டை வழக்கம் போல் ஏகபோகமாகக் கைப்பற்றிக்கொள்ள நினைத்தனர் பணக்காரர் என்போர். காங்கிரஸ் ஜில்லாப் போர்டுத் தேர்தலில் கலந்தது. அபேதவாதப் பயமுறுத்தலைக் காட்டி நகரத்தாரையும் பொது மக்களையும் காங்கிரசுக்கு விரோதமாகத் தூண்டச் சிலர் பெருமுயற்சி செய்தனர். அது பலிக்கவில்லை. செட்டியார்கள் உண்மையை யுணர்ந்து கொண்டனர்; சிலர் பட்டங்களையோ பதவிகளையோ அடைந்ததற்குத் தங்கள் சமூகப் பெயரால் வாழ்த்துக்கூறி விருந்தளித்துத் தாங்கள் பட்டபாடு போதும் என நன்றாகத் தெரிந்துகொண்டு விட்டனர். நகரத்தாரும் பிற சமூகத்தவர் போல் மதிக்கப்பட வேண்டுமானால் காங்கிரசில் சேருவதே அதற்கு வழியென்றும் அடிமையை யுணர்த்தும் பட்டங்களை விட்டுத் தொலைப்பதே மேல் எனவும் கண்டு கொண்டனர். அதற்குரிய தீர்மானங்களை அஞ்சா நெஞ்சோடு ஆற்றினர். தனவணிக அறிஞர்கள் அவற்றை யாண்டும் பிரசாரமும் செய்து வருகின்றார்கள். அது நிற்க,

ஜில்லாப் போர்டுத் தேர்தல் ஒருவாறாக நடந்து முடிந்தது. தனவணிக நாட்டில் போட்டி போடப்பெற்ற ஸ்தானம் பதினாறு. பதினாறு ஸ்தானங்களிலும் காங்கிரஸ் காரருக்குப் போட்டியாக ராஜா. சர் அண்ணாமலை யவர்கள் தமது ஆட்களை நிறுத்தினர். அப் பதினாறில் ஒன்று இன்னும் முடிவு பெறவில்லை. அதுதான் ஆனரபிள் டாக்டர். ராஜா சர். அண்ணாமலையவர்களின் மாப்பிள்ளை ஸ்ரீமாக். க. வெ. சித. வேங்கடாசலம் செட்டியார் அவர்கள் நிற்குமிடம், அது போகப் பாக்கியுள்ள பதினைந்தில் எட்டு இடங்கள் காங்கிரசுக்குக் கிடைத்திருக்கின்றன. எஞ்சிய ஏழு ஸ்தானங்களை ராஜா சர். அண்ணாமலையவர்கள் கைப்பற்றி யிருக்கின்றார். போட்டியின்றி விடப்பட்ட இருவரையும் தங்களோடு சேர்த்து ஒன்பதாக எதிர்க் கட்சியினர் கணக்குச் செய்வதாகத் தெரிகிறது. அது எங்ஙனமாயினும் ஆக.

மொத்தத்தில் இராமநாதபுரம் ஜில்லாப் போர்டில் இதுவரை முடிவு சொல்லப்பட்ட ஸ்தானங்கள் நாற்பத்தாறில் முப்பது காங்

கிரசுக்குக் கிடைத்திருக்கிறது. இன்னும் ஆறு ஸ்தானங்களின் தேர்தல் முடியவில்லை. அம் முடிவை எதிர்பார்க்காமலேயே காங்கிரஸ் பெருவாரியாக இப்போதே இருக்கிறது. போர்டு பிரிக்கப்பட்டு நியமனங்கள் மூலம் காங்கிரஸ் விரோதிகள் அதிகமாக்கப்பட்டுச் சிலர் ஆதிக்கம் பெற முயற்சி நடப்பதாகத் தெரிகிறது. அவ் வகையில் காங்கிரஸ் விரோதிகள் வெற்றி பெறலாம். அது பொது ஜனங்களின் ஆதரவைப் பெற்றதாகாது. ஜில்லாப் போர்டு ஸ்தானங்கள் ஒரு புறமிருக்க,

தனவணிக நாடு இதுகாலை கொண்டுள்ள எழுச்சி பெருமிதமானது. ஜில்லாப் போர்டு, இதுகாறும் பட்டதாரிகட்கும் ஜமீந்தாரர்கட்கும் பணக்காரர்கட்கும் சொந்தச் சொத்தாக இருந்தது. இனி அது இல்லையென இந்தத் தேர்தல் காட்டிவிட்டது. கண்டனூர் ஸ்ரீமாந் வயி. ராம. வயிரவன் செட்டியாரை டாக்டர் சுப்பிரமணியம் பெருவாரியான ஓட்டுகளால் தோற்கடித்தார். திருப்புத்தூர் ஸ்ரீமாந் பிரான்மலை ராவுத்தர் என்ற புராதன அங்கத்தவரை ஸ்ரீமாந் ச. பீ. ந. மு. முகமத் இபுராகிம் ராவுத்தர் ஏராளமான ஓட்டுகள் அதிகம் பெற்று முறியடித்தார். ராஜா சர். அவர்களின் சொந்தக்காரரான அளசாபுரி ஸ்ரீமாந் வீரப்ப செட்டியாரை ஸ்ரீமாந் கரு. முத்து. சிவலிங்கம் வென்றார். ஸ்ரீமாந் சுப. க. அ. இலக்குமணச் செட்டியாரை மானமதுரை அட்வகேட் சேஷாத்திரி ஐயங்கார் ஆயிரத்துக்கு அதிகமான ஓட்டுகளால் வெற்றி கொண்டார். ஸ்ரீமாந் வயிரம் அருணாசலம் செட்டியாரை திரு. பீ. நா. சொ. விரட்டியடித்தார். தெற்கு வட்டகையிலுள்ள பெரும் பணக்காரர்களுள் ஒருவராகிய பூங்குடி ஸ்ரீமாந் கூ. அரு. க. சுப்பிரமணியன் செட்டியாரை ஸ்ரீமாந் உடையப்பா ஜெயித்தார். தேவகோட்டை ஜமீந்தார் குமாரர் ஸ்ரீமாந் சோமநாதன் செட்டியாரைக் காங்கிரஸ் கார்மேகம் வீழ்த்திவிட்டது.

இன்ன நிகழ்ச்சிகளால் என்ன காண்கின்றோம்? தனவணிக நாடு விழித்துக்கொண்டு விட்டது. அங்கு அச்சம் பறந்தோடிக் கொண்டிருக்கிறது. நேர் வழிக்கு முட்டுக்கட்டை போடுபவர் யாராக இருந்தாலும் அவரைப் பொருட்படுத்தப் போவதில்லை. இந்நல்ல நிலை தொடர்ந்து ஆற்றொழுக்குப் போல் இடையறாது ஓடிப் பாய்ந்து நாட்டுக்கு நலம் பயப்பதாக!

## இடி முழக்கம்

### காரியக் கமிட்டியின் தவறு.

நாளை நின்று வேலூரில் நடைபெறவிருக்கும் முப்பத்தெட்டாவது தமிழ் மாகாண மகாநாட்டிற்குத் தலைவர் தேர்ந்தெடுக்கும் விஷயமாகத் தமிழ் மாகாணக் காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்த முடிவு தவறானதாகும். காரியக் கமிட்டி கடைசி நிமிடம்வரையும் தவறு தலாகவே நடந்து கொண்டுவிட்டது. தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் 43-வது விதிப்படி ஜில்லாக் கமிட்டிகளில் பாதித் தொகைக்கு மேல் சிபார்சு செய்யப்பட்டவர் தலைவராதல் வேண்டும். அப்படியில்லையேல் சிபார்சுசெய்யப்பட்டவருள் ஒருவரைக் காரியக் கமிட்டி முடிவு செய்யலாம். தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஜில்லாக்கள் பதினைந்து. அதில் சென்னை ஜில்லா தலைவர் தேர்தலுக்கு எவரையும் சிபார்சு செய்யவில்லை. வடஆற்காடு ஸ்ரீமாந் எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரைச் சிபார்சு செய்தது. பாக்கி பன்னிரண்டில் திருநெல்வேலி, மதுரை, திண்டுக்கல், சேலம், இராமநாதபுரம் ஆகிய ஐந்து ஜில்லாக்கள் ஸ்ரீமாந் முத்துரங்க முதலியார் பெயரையும் காரைக்குடி, திருச்சி, தென் தஞ்சை, வட தஞ்சை, செங்கற்பட்டு, கோவை, தென்னாற்காடு ஆகிய ஏழு ஜில்லாக்கள் ஸ்ரீமாந் வேதரத்னம் பெயரையும் சிபார்சு செய்தன. இந்நிலைமையில் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுவது யாரை? சர்தார் வேதரத்னம் பெயர் புறக்கணிக்கப்பட்டு ஸ்ரீமாந் முத்துரங்கம் தலைவரெனக் காரியக் கமிட்டியால் முடிவு செய்யப்பட்டது எதனால்? வடதஞ்சை வேதரத்னத்தைச் சிபார்சு செய்யவில்லையென யாரோ ஒருவர் காரியக் கமிட்டியில் சொன்னாராம். அப்படியானால் பத்திரிகையில் வந்த அச்செய்தி ஏன் மறுக்கப் படவில்லை? அப்படியே வைத்துக் கொண்டாலும் அதைத் தள்ளிப் பார்த்தாலும் வேதரத்னத்தை ஆறு ஜில்லாக்கள் ஆதரிக்க ஐந்து ஜில்லாக்களால் சிபார்சு செய்யப்பட்ட ஸ்ரீமாந் முத்துரங்கம் தெரிந்தெடுக்கப் படுவானேன்? இதனால் முத்துரங்கம் அவர்களை நாம் விரும்பவில்லையென யாரும் கருதுதல் ஆகாது. ஜில்லாக் கமிட்டிகளில் பெரும்பாலானவற்றின் முடிவைக் காரியக்கமிட்டி காரணமின்றித் தள்ளுகிறது. ஸ்ரீமான் சத்தியமூர்த்தியைத் தலைவராகக் கொண்ட அக்கமிட்டி வேண்டுமென்றே சிலர் மீது வன்மங்கொண்டு தங்கள் அதிகாரத்தைத் தவறான வழியில் செலுத்துகிறது. இன்னோன்ன தீவினைகளைத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் புதிய அங்கத்தவர் மறக்க மாட்டார் என நம்புகிறோம்.

## ஐயா!—ஒரு வார்த்தை

"மகாகனம் சாஸ்திரியாரும் அவரது துணைவரான திரு. பாஸ்மனும் ஆறு வாரம் மட்டிலுமே மலாய் நாட்டில் தங்குவதாயின் அங்குள்ள சரியான நிலைமையை அறிவதற்கு சமயங் கிடைப்பது அரிது" என்று எழுதுகிறது 'ஸ்டேட்ஸ்மன்'. அதனை திரு. சங்கர் 'ஹிந்துஸ்தான் டைம்ஸி'ல் மேற்காணுமாறு சித்தரித்திருக்கிறார்.



## பட்டந் துறந்த செட்டியார்!

காரைக்குடி ஸ்ரீமாந் சு. அ. சு. ராம இராமநாதன் செட்டியார் தமது ராவ்பகதூர் பட்டத்தைத் துறந்தார் என்ற செய்தி திடுக்கிடச் செய்வதாகும். நகரத்தாருள் முதலாவதாகப் பட்டம் விட்டவர் இவரே. தமது விருதுகளை மேன்மை தங்கிய வைஸ்ராய் அவர்கட்குத் திருப்பி யனுப்பிவிட்டுக் கதர்க் குல்லா யணிந்து தஞ்சை நகரசபைத் தலைவராக ஸ்ரீமாந் செட்டியார் ஆனார். பிற்போக்குடைய நாட்டுக்கோட்டைச் செட்டியார் அசோசியேஷனின் ஒரு காரியதரிசி இப்படிச் செய்தது வியப்பில்லையா? கோவிலூர் நகரத்தார் மகாநாட்டுத் தீர்மானத்தைப் பின்பற்றிப் பட்டத்தை வீசிவிட்டுக் காங்கிரசுக்கு வந்த திரு. இராமநாதன் செட்டியாரை அன்போடு வரவேற்கின்றோம்.

## நாரதர் காட்சி—

# குமுறும் மேனாடு

### நான் பல நாட்கள்

வெளியே வரவில்லை. தற்செயலாக திங்கட்கிழமை 'வாஸ்தவப் பிரசாரிணி' பத்திரிகையை வாங்கிப் பார்த்தேன். அதில் என் கண்ணெல்லாம் கெட்டுப்போக! "துருக்கி, ஈரான், ஈராக், அப்கானிஸ்தான் ஆகிய நான்கு தேசங்களும் தற்போதிய உலக நெருக்கடியை உன்னி, ஒரு ஐக்கிய உடன்படிக்கை செய்து கொள்ளப் போகின்றன" என்ற ஒரு செய்தி இருந்தது. அதனைப் படிக்கவும், எனக்கு வந்த போச்சரியத்திற்கு அளவில்லை.

### இந்த நான்கு

தேசங்களும் முஸ்லிம் மயம். சங்கிலி போன்று ஒட்டியிருக்கின்றன. 20-ம் நூற்றாண்டின் விழிப்பு அவைகளையும் தட்டி யெழுப்பியுளது. அவற்றுள் துருக்கியின் கமால் 'படே ஆசாமி.'; ஐரோப்பியப் பெருமையுடையவர். இதனை என் சாதன மனதினால் சற்று யோசித்தேன். நாராயண நாமத்தை ஜபித்தேன். மூத்த காலத்தின் புரிந்த திருவிளையாடல்களை உன்னினேன்.

### அப்போது

ஸ்பெயினில் போடப்பட்ட யுத்த விதை விளைந்து, கொடி வீசி விட்டதால்தான் மேற்படி முஸ்லீம் தேசங்கள் கூடுகின்றனவோ வென்ற சந்தேகம் வந்தது. உடனே வீணாபாணியாக, நாராயண நாம ஜபத்துடன் ஆகாய மார்க்கம் ஸ்பெயின் சென்றேன். அம்மா! வழிநெடுக—அதாவது மத்திய தரைமுழுதும் மூளைவினி பிரதாபம் பொறுக்க முடியவில்லை. பல இதாலியக் கப்பல்கள், பல இதாலிய விமானங்கள், பல விமானக் கூடங்கள், ராணுவ கவாத்துகள்.........ஆ! ஆ! சொல்ல முடியாத காட்சி! மத்திய தரை ஆங்கிலேய சாம்ராஜ்யத்தின் பிரதான ரத்தக்குழாய் என்றார் ஈடன். பாவம்! அந்த பிரதானக் குழாயை இத்தாலியப் புழுக்கள் அரிக்கின்றன. போகட்டும். நான்,

### ஸ்பெயினுக்கு முன்

சற்று உரோமாபுரியைப் பார்வையிடலாமென்று இறங்கினேன். ரோம் போர்க்களமல்ல வாயினும் ராணுவ வாடை வீசுகிறது. டாங்குகள், ஆயுதமோட்டார்கள், பிரம்மி வண்டிகள், யுத்தக் கப்பல்கள், நீர்மூழ்கிகள், டார்பிடோக்கள் (உடைப்படை) எல்லாம் தங்கள் தங்கள் வீடுகளிலிருந்தவாறே வெளியே தலையை நீட்டிக் கொண்டிருக்கின்றன. 'உம்' என்றும் வெளியே பாய்ந்துவிடும் போலிருக்கிறது..................விஞ்ஞானிகளே! கதவே மூடப்படவில்லை. விஞ்ஞானிகள் முஸோலினியிடம் சத்தியம் செய்திருக்கிறார்களாம். தங்கள் சக்தி முழுவதையும் போர்க்கருவிகட்காக உபயோகிக்கிறார்கள். ஆயுத உற்பத்திச் சாலைகளின் கூடம்மோதும் ஓசையும், எஞ்ஜின்கள் சுழலும் அரவமும்,

## அறிவிப்பு

நமது பத்திரிகையின் விளம்பர ஏஜெண்டாக இருந்து வந்த S. கிருஷ்ணமூர்த்தி என்பவர் தவறாக நடந்து கொண்டதுபற்றி அவரை ஏஜெண்டு ஸ்தானத்திலிருந்து நீக்கியிருப்பதால் நமது ஆபீசுக்கு வரவேண்டிய பாக்கிகளை அவரிடம் கொடுக்க வேண்டாமென பொதுஜனங்கட்கு இதனால் தெரிவித்துக் கொள்வதுடன் அவர் வாங்கியிருக்கும் தொகைக்கு நாம் கட்டுப்பட மாட்டோமென்றும் அறிவித்துக் கொள்கிறோம்.

மானேஜர்,
ஊழியன்.

படைகளைப் பாலிஷ்செய்யும் ஒலியும் அம்மம்மா! பாரத யுத்த காலத்திருந்த இந்திரப்பிரஸ்தத்தை தூக்கி அடித்து விடும் போலிருக்கிறது.

### சூக்ஷ்ம சரீரியாக

நான் மெல்ல ரோமாபுரிக் காரியாலயங்கட்குள் புகுந்து பார்த்தேன். ஆ! என்ன ஆச்சரியம்! உத்யோகஸ்தர்கள் பலர் கூடிக்கூடி இரகசியம் இரகசியமாக ஏதேதோ பேசுகிறார்கள். ஒருவர் பக்கத்தில் சென்று உற்றுக் கேட்டேன். "லீக் கவுன்சில் (ச. தேச சங்கம்) டிசம்பர் 10-ந் தேதி கூடுகிறதே; அப்போது நாம் கலந்து கொள்வதா; ஜெர்மனி, ஜப்பான்களைப் போல நீங்கிவிடுவதா? ஒருகால் கவுன்சில் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றிவிட்டால் அவமானமல்லவா? ஆகவே யுத்தத்தை ஆரம்பித்துவிட்டாலென்ன?"—இதுதான் அவர்கள் பேச்சின் சாரம்.

### இதனைக் கேட்கவும்

'வாஸ்தவ ப்ரசாரணி' யில், ஸ்பெயின், சர்வதேச சங்கத்தினிடம், கவுன்சிலைக் கூட்டி, தன் நிலைமையைப்பற்றி யோசிக்க வேண்டுமென்று கேட்டிருப்பதாய் பிரசுரித்திருந்த செய்தி ஞாபகத்துக்கு வந்தது. அந்தக்ஷணமே எழுந்து பாய்ந்தேன் ஸ்பெயினுக்கு!

### ஸ்பெயின்! அந்தோ!

நிலைமை பரிதாபம்! அந்த துஷ்ட புத்திகளான முஸோலினியும் ஹிட்லரும் கலகக்கார பிராங்கோவைத் தூண்டிவிட்டு தேசத்தைப் பாழ்படுத்தி விட்டார்கள்! லக்ஷக்கணக்கான ஸ்பானீய மக்கள் மாண்டுபோனார்கள்! இறந்த குழந்தைகட்கும், அழிந்த சொத்துக்கட்கும் கணக்கில்லை. பாழாய்ப்போன பிராங்கோ வெற்றியடைந்து தொலைந்தாலும் தேசம் உருப்படுவது அசாத்தியம். எதிர்காலத்தில் ஸ்பானிய மக்களென்று வழங்குவதற்குக்கூட ஆள் கிடைப்பது கஷ்டம். ஒருகால் இதாலியரும் ஜர்மானியரும் வந்து குடியேறலாம். ஏறினால் பிராங்கோவுக்குக் கீழே இருப்பார்களா?—படுபாவி பிராங்கோ!

### நான் ஸ்பெயினில்

இறங்கியதும், உடைந்த நகரம், ஒழிந்த ரோடு, உருவிலா தொழிற்சாலைகள், ஓய்ந்த நிலங்கள் இவைகளையே கண்டேன். எங்கேயோ போர் முழக்கம் கேட்டுக் கொண்டிருந்தது. மெல்ல நான் தலைநகரான மாட்ரிடுக்குச் சென்றேன். அங்கும் மேற் சொன்ன அவலக் காட்சிதான். இறந்தவர்போக இருப்பவர்கட்கு சாப்பாடு கிடையாது. என்றாலும் ஜனங்கள் கலகப் படையுடன் போர் செய்தார்கள். சர்க்கார் படை சில நாட்களாக வெற்றியடைந்து வருகிறது; மாட்ரிடுக்குள் கலகக்காரர்களை புகவிடவில்லை. இதனை வெளியே சொல்ல வெட்கப்பட்டு, தங்கள் போர் முறையை மாற்றிக் கொண்டிருப்பதாக பாவனை காட்டிக் கொண்டு கலகக்காரர் தம் படையில் ஒரு பகுதியை வலன்ஷியாவுக்கு அனுப்பி விட்டனர்.

### இதற்குள் ஒன்று.

நான் கலகக்காரர்களை உற்றுப் பார்த்தேன்.—பலர் ஸ்பானியர்களல்ல. அவர்கள் உபயோகிக்கும் ஆயுதங்கள் விமானங்கள் முதலியனவும் விதேசியே. அவற்றில் பெரும் பாகத்தை சில மாதங்கட்கு முன்னால் வேறு ஏதோ ஒரு போர்க்களத்தில் பார்த்ததாக ஞாபகம்.

### நான் மாட்ரிடைவிட்டு

வெளியே செல்ல முனைந்தபோது 1000 ஜெர்மன் தொண்டர்கள் கலகப் படையில் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் என்னமாதிரி தொண்டு செய்யப் போகிறார்களென்பது தெரியவில்லை. கையில் ஏதேதோ மூட்டை முடிச்சுக்களை வைத்திருக்கிறார்கள். அவற்றுக்குள் என்ன ஊழியம் திரட்டி வைக்கப் பட்டுள்ளதோ! இன்னும் சில நாட்களில் பார்ப்போம்—பொதுவாக பிராங்கோவின் போரசை அவர் தலையில் மண்ணை வாரிப்போடுகிறது!—எனக்கு




ஸ்பெயின் விஷயத்தில் அளவிலாத கவலை! இருந்து என்ன செய்யலாம்!

### அங்கிருந்து

நேராக பாரீஸ் சென்றேன். பாரிசின் ஒய்யாரமும், அழகும், மங்கையரின் மயக்கும் இன்னும் கலைக்கப் படாமலிருக்கின்றன. விளையாட்டுகளும் ஆட்டங்களும் குன்றவில்லை. பொதுஜனங்கள் சந்தோஷமாகவும், முந்திய நாட்களைவிட உற்சாகமும் சுறுசுறுப்பு முடையவர்களாகவுமிருக்கிறார்கள். ஆனால் தொழிற்சாலை முதலாளிகட்கும் தனவந்தர்கட்கும் சற்று முகத்தில் வாட்டம். காரணம் சர்க்கார் அபேதவாதமாகி விட்டதல்லவா?—அதன் பயன் போலும்.

### முரவாட்டமாயினும்

அவர்கட்கு தேசத்தைப்பற்றிய கவலை குறையவில்லை. உத்யோகஸ்தர்கள் ஆயுதசாலைகளை 'முடுக்கி' விட்டிருக்கிறார்கள். ராணுவப் பயிற்சிக்கு ஊக்கமூட்டி யிருக்கிறார்கள். இளைஞர்கட்கு யுத்தமுறை கற்பிக்கப்படுகிறது. புதிதாக பெண்களும் போருக்கு உதவ வேண்டுமென்று உத்தரவு பிறந்திருக்கிறதாம்; ஆதலால் அழகான மங்கையர் குதூகலமாகப் போர் ஆடை புனைகின்றனர். விமான வோட்டத்தில் மிகுந்த அக்கறை யெடுக்கின்றனர். நான் ஒரு தெருவில் வந்தபோது ராணுவ வண்டிகள் ஒரு பவனி நடத்திக் கொண்டிருந்தது. இதுபோல் அடிக்கடி நடைபெறுகிறதாம். தொழிலாளர்களும் விவசாயிகளும்தான் பிரமாதமாக ஊக்கம் காண்பிக்கிறார்கள்.

### அவர்களது தலைவர்

புளூம்—முதல் மந்திரி—மகா சமர்த்தர். அவருக்கு அபார செல்வாக்கு. நாட்டு நிலைமையை வெகு சீக்கிரத்தில் மாற்றிவிட்டார். வெளிநாட்டு எதிர்ப்புக்கு பரிஹாரம் தேடுவதில் எவ்வளவு ஊக்கம் கொண்டிருக்கிறாரோ, அவ்வளவு உள்நாட்டு ஆக்கத்திலும் கருத்துக் கொண்டிருக்கிறார். அவரது கண்ணில் ஒரு அதிசயத்தைக் கண்டேன். இதாலியரும் ஜெர்மானியரும் பாஸிஸ்டு சதிக்கு ஏதேனும் செய்கின்றார்களா வென்று ஓயாது கூர்ந்து நோக்கிக் கொண்டேயிருக்கிறார்.

(46-ம் பக்கம் பார்க்க)





# ஜன அரசுக் கட்சி

அல்லது

# காந்தாதேவியின் திட்டம்

——எஸ். வி.——

I

"பங்கான் மாலை என்று இதை சொல்வார்கள். கோலாப்பூர் வைரமும், திபத் இந்திர நீலமும், காஷ்மீரப் பச்சைகளும், இலங்கை மாணிக்கமும் 'அழுத்தப்'பட்டிருக்கின்றன. சுத்தச் சுதேசி."

என்று கூறிக்கொண்டே ஆறுமுகம் தன் கையிலிருக்கும் மாலையை மேஜைமீது வைத்தான். அவன் வாய் தான் மேற்கூறிய சொற்றொடர்களை வெளியிட்டது என்றாலும் கண்களில் நவரசங்களும் (அதற்கப்பாலும் கூட பலப்பல) வந்து போயின. கைகால்கள் மரியாதையையும், அடக்க ஒடுக்கங்களையும் நடன ரூபத்தில் வெளிப்படுத்தின.

ஆறுமுகம் காந்தாதேவிமுன் 'பங்கான்' மாலையை வைத்துவிட்டு சற்று ஒதுங்கி நின்றான்.

சினிமாவுக்குத் தயாராகி வந்த ஓர் 'நடனமணி' போல், அபார ஆடை அணிகளைப் புனைந்திருந்த காந்தாதேவிதன் கூரிய கண்களை முதலில் ஆறுமுகத்தின் மீதும் அப்பால் நகையின் மீதும் பாய்ச்சி, அழகும் ஆடம்பரமும், அந்தஸ்தும் பணச் செருக்கும், கொழுப்பும் சேர்ந்து புரண்டு செறிந்து கிடக்கும் உடம்பை மெல்ல அசைத்து, பெண் யானைபோல் நடந்து, 'மதி முகம்' மலர, கொவ்வை இதழ் புன்னகையரும்பி சற்று அகல, முத்துப் பற்களைக் காட்டியவண்ணமே ஒரு நாற்காலியில் உட்கார்ந்து நகையைக் (பங்கான் மாலையைக்) கையிலெடுத்தாள். அழகு தவண்ட செல்வக் கைகள் சிறிது நேரம் 'பங்கான்' மாலையைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தன.

அதன் மேல் ஜமீந்தாரிணி என்ற 'முத் தோரணை'யில் வெவ்விழியை—பாவம்! ஆறுமுகத்தின் மேல் எறிந்து, கம்பீரமாக, "என்ன விலை இதற்கு!" என்றாள்.

ஆறுமுகம்:—(மிகப் பணிவாக) பதினொராயிரத்து முன்னூற்று எழுபத்து மூன்று ரூபாய்.

இந்த தொகையைக் கேட்டதும் காந்தா தேவியின் முகத்தில் ஒரு மின்வெட்டு மறைந்தது. எனினும்

பிரமாதமாக நினையாதவன் போல், "நல்லது; இருக்கட்டும்; திங்கட்கிழமை மாலை 4மணிக்கு வா"வென்றான்.

ஆறுமுகம் வெற்றி பெற்றுவிட்ட விசையில் விரைந்து சென்றான்.

*    *    *

II

நண்பகல் இரண்டு மணி. அரண்மனையில் 'தாசவிருத்தி'யிலிருக்கும் ஒருவரிருவரையும் காந்தா தேவியையும் தவிர ஏனையோரெல்லாம் இன்ப நித்திரையிலாழ்ந்து விட்டனர். ரமணிக்கோட்டை ஜமீந்தார் 12 மணிக்கே தூங்கிவிட்டார் போலிருக்கிறது. ராமாயணத்தை நினைப்பூட்டினார். அவர் அறையில் ஆள்நடமாட்டமே காணப்படவில்லை.

ஆதவனின் கொடுமை பிரஸ்தாப தூக்கத்துக்கு பெரிய உதவி புரிந்தது. அரண்மனையைச் சுற்றி நின்ற படர் மரங்களிலிருந்து படர்ந்த சிறு குளிர் காற்று தூக்கத்துக்கு இன்பமளித்தது. பொதுவாக இத்தாலியர் புகுந்த அடிஸ் அபாபாவாகத் தோற்றியது அரண்மனை.

அந்த வேளையில் காந்தாதேவி சிங்கார நடை நடந்து, ஜமீந்தார் அறைக்குள் தாராளமாகப் புகுந்தாள். அவள் கண்களில், அழகிய கட்டிலென்னும் பாலாழியில், தலையணைகள் என்னும் நாகப்பாம்புகளின் மீது, ரங்கராய பாண்டியாவாகிய விஷ்ணு சாய்ந்து கிடந்து தூங்குவது தெரிந்தது.

பாண்டியா திருமாலின் நிறத்தை பரிபூரணமாகப் பெற்றிருந்தாலும் ஒரு சிறு அழகராவார். நல்ல தாட்டிகமான உடம்பு அவர் ஓர் ஜமீந்தார் என்பதை விளம்பரப்படுத்தியது. கைகால்கள், உடம்பிலிருந்த தளதளப்பு என்பனவெல்லாம், வெயிலி லிறங்காமல் உடலுழைப்பில்லாமல் அறுசுவையுண்டி அருந்தி அமர்பவர் என்பதை விளக்கின. அவர் மூக்கிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கும் கொரட்டை (ஏன் சாகளத் தொனி) அன்னார் தூங்குவதில் போதுமான அனுபவம் பெற்றவர் என்பதைச் சுட்டிக்காட்டிற்று.

அவருடம்பை ஒரு பட்டு 'ஷர்ட்' அழகு செய்தது; முகத்தை மீசை அழகு செய்தது.

அவர் கடுந்தூக்கத்தில் களித்திருப்பதைக் கண்ட காந்தா தேவி தம் இயல்பான நடையைவிடாது இயங்கிச்சென்று, பக்கத்தில் உட்கார்ந்தாள். பின் அவரது கையை மெல்லத் தூக்கி தன் மடியில் போட்டுக் கொண்டு, "இந்தா! உங்களைத்தானே" என்று கன்னத்தில் விரலால் தட்டி எழுப்பினாள். சுமார் 15 நிமிஷம் கும்பகர்ண படலத்தை நினைப்பூட்டியதும் ஜமீந்தார் கண்ணைத் திறந்தார். திறக்கும் முன் காலையெடுத்து அப்புறம் போட்டு மெல்ல உடம்பை சற்று வளைத்தார். ஆம் 'பாலாழி' 'கலங்கிற்று'. அதன் மேல் வெகு சிரமப்பட்டு தலையை உயர்த்தி 'நாகப்பாம்பின்' மீதே வைத்துக்கொண்டு "காந்தா! உனக்கு தூக்கம் வரவில்லையா?" என்றார்.

சாதுரியம் மிக்க காந்தா "எப்படி வரும்? ஓயாது கவலையானால் தூக்கம் வருவதெப்படி?" என்றாள்.

ஜமீன் :—என்ன கவலை?

காந்தா:—என்ன கவலை என்றா கேட்கிறீர்கள்? எத்தனையோ தரம் குறிப்புக் குறிப்பாகச் சொல்லி யிருக்கிறேன். நீங்கள் செவிசாய்க்கவே செய்யவில்லை. எலக்ஷன் நெருங்குவதுகூட உங்கட்குத் தெரிவதில்லை.

ஜமீன்தார்:—(எழுந்து உட்கார்ந்து, தன் கோமளக்காதலியின் குளிர் முகத்தையும், ஒளிர் விழியையும், துளிர் புன்னகையையும் நோக்கி ஆநந்த வாரிதியி லாழ்ந்தவாறே) என்ன காந்தா! நீ குறிப்பாக எதைச் சொன்னாய்; நான் எதைக்கேட்கவில்லை?

காந்தா:—அதுவா?..............நீங்கள் சமாசாரப் பத்திரிகைகளைக் கேட்கின்றீர்களே; அவற்றில் நம் வகுப்பார் என்ன செய்கின்றார்கள்; கவனித்தீர்களா?

ஜமீன்:—என்ன செய்கிறார்கள்?

காந்தா:—ஒவ்வொரு ஜமீன்தாரும் ஏதாவதொரு கட்சியை வைத்திருக்கிறார்கள். கூடிய வரை—அவர்கள் ராஜாக்களல்லவா; குடியரசுக் கட்சி; ஜன அரசுக் கட்சி; சுதேசிக் கட்சி என்பவற்றை ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஜமீன்தார் யோசித்தவாறு, மனைவியைக் கூர்ந்து பார்த்தார். அவர் கவனம் முழுதும் அவளது பேச்சை நோக்கிப் பாய்ந்தது. முகம் வேற்றுமையடைந்தது.

காந்தா :—அவ்வாறு நாமும் ஏதாவது ஒரு கட்சியை ஆரம்பித்து உழையாதிருந்தால் இந்த காலத்தில் மதிப்பேது; கவுரவமேது?

ஜமீன்தார் மெல்ல தலையை யசைத்தார். கண்கள் அவர் மனதில் சுழன்று கொந்தளிக்கும் யோசனைக்கு விளம்பரமாயின. அதனை நன்கு தெரிந்து கொண்ட காந்தாதேவி மேலும் பேசலானாள் :—

"காலம் தலைகீழ் மாறிப்போய்விட்டது. பணக்காரனென்றால் பாவியென்று நினைக்கும் காலமாகி விட்டது. சில வருடங்கட்கு முன்பு கிராப் செய்வதென்றால் மகா ஒழுங்கீனம் என்று ஜனங்கள் நினைத்து வந்தார்கள். இந்நாளோ கிராப் செய்யாதவன் அநாகரிகன் என்று கருதப்படுகிறது. சில வருடங்கட்கு முன்பு பிராமணனென்றால் எல்லோரும் கவுரவிப்பது வழக்கம். இந்நாளோ பறையன் என்றால் எங்கும் போற்றப்படுகின்றது. அரசரென்றால் முற்காலத்தில் பிரமாதமாகப் போற்றப்படுவார்கள்; இக்காலத்திலே ஆண்டியென்றால் போற்றப்படுகிறான். பண்டைக் காலத்தில் ஆங்கிலம் பேசுவார்க்கு பெருமை. இந்நாளோ தமிழ் கற்பார்க்கு மகத்துவம். பண்டைநாளில் ராவ்பகதூர், திவான்பகதூர் பட்டம் பெற்றவர்களுக்கு பிரமாதமான கவுரவம்;



இக்காலத்திலோ பட்டங்களை விட்டவர்கட்கு கவுரவம்; இப்படியே உலக நிலை தலைகிழாகப் புரண்டு விட்டது. அதே மாதிரி பணக்காரர் என்றால் பொதுஜனங்கள் அடி பணிந்தது போக, இப்போது இகழத் தொடங்கி விட்டார்கள். எனவே நாம் தூங்குவது சரியல்ல; உடன் எழுந்து நமது நிலைமையைப் பாதுகாக்க வேண்டும்.

ஜமீன்தார் தம் அழகுக் காதலியின் ஒய்யாரமான பேச்சைக் கூர்ந்து கேட்ட பின்னர் "உண்மை; உண்மை. காந்தா நீ சொல்வது உண்மை" என்றார்.

காந்தா:—ஜமீன்தார்களென்றால் ஏகாதிபத்யத்தின் தூண்களென்று அபேதவாதிகளும் ஜனநாயகவாதிகளும் கூறுகின்றார்கள். அதுபற்றியே ஜனநாயகக் கட்சிகளை நாம் தொடங்கவேண்டு மென்கின்றேன். முசோலினி, ஹிட்லர் போன்றார்கள் ஜனநாயகக் கொள்கைகளைத்தான் கடைப்பிடித்து சோஷலிசம் (அபேதவாதம்) பேசினார்கள். சில நாட்களுக்குள் ஆதிக்கம் தங்கள் கைக்கு வந்து, செல்வாக்கு மிகுந்து, பொதுஜனங்களின் நம்பிக்கை பெருகிவிடவே, பாஸிசத்தை நிறுவிவிட்டார்கள்.

ஜமீந்தார் :—பாஸிசமா?

காந்தா :—ஆம். முதலாளித்வத்தின் மற்றொரு உருவம். பொதுவுடைமைப் போர்வை போர்த்தது. அதாவது தொழிலாளிகள், விவசாயிகளைத் தம் பக்கத்துக்கு (பொதுவுடைமைக்காரர்கள் சொல்லும் சில) சௌகரியங்களைக் கொடுப்பதன்மூலம் இழுத்துக் கொண்டு ராணுவத்தினால் நாடாளும் ஒரு கொள்கை.

ஜமீன் :—எனக்கும் தெரியும் அது. அதனை இப்போது கூறினால் பொதுஜனங்கள் பிரிந்து விடுவார்களன்றோ? பொல்லாத எதிர்ப்பு ஏற்பட்டுவிடுமே.

காந்தா:—ஆம்; ஆம். நான் விஷயத்தை விளக்குவதற்காகவே பாஸிசத்தை விரித்துக் கூறினேன். நமக்கு வேண்டுவது முதலில் ஒரு குடியரசுக் கட்சியே.

ஜமீன் :—காங்கிரஸ்தான் மகா சமுத்திரம் போலிருக்கிறதே; அதைவிட என்ன குடியரசைப் பற்றி நாம் கூறிவிட முடியும்?

காந்தா:—அதற்குத்தான் இப்போது ஜமீன்தார்கள் ஒரு வழி கண்டுபிடித்து விட்டார்களே. காங்கிரஸில் யாராவது ஒருவரிருவரைப் பிடித்து அவர்களுடைய குற்றங் குறைகளை எடுத்து வீசினால் காங்கிரஸ் மீது குறை கூறியதாகிவிடுகிறது. மேலும் காங்கிரஸ், அநுஷ்டானத்தில் எவ்வளவோ கஷ்டங்களையும் நிலைமைகளையும் பார்த்து கவனித்து செய்யும் தீர்மானங்களைப் போலன்றி—ஏன் நாம் தான் வாயினால் தானே சொல்ல வேண்டும்? கொஞ்சம் தீவிரமாகப் பேசி விட்டால் சரியாகி விடுகிறது. மேலும் இன்னொரு சௌகரியம். காங்கிரஸ் எதை எதைச் சொல்லவில்லையே, அதனையெல்லாம் நாம் சேர்த்துச் சொல்லிவிட்டால் தீவிரவாதிகள் நம் பக்கம் சேர்ந்து விடுவார்கள்; அல்லவா?

ஜமீன்தார் புன்னகை பூத்தார்; அவர் முகம் என்னமோ சொல்லப் போகிறாரென்பதைக் காட்டிற்று. அதனைக் குறிப்பால் தெரிந்து கொண்ட காந்தா:—என்ன சொல்லப் போகிறீர்கள்? திறந்து சொல்லுங்களேன்.

ஜமீன்:—நாம் ஒரு கட்சி ஆரம்பித்தால் சீக்கிரத்தில் ஜனங்களின் ஆதரவு வந்து விடும்: எப்படித் தெரியுமா? நீ நன்றாகப் பேசுகிறாய். நானும் பேசுகிறேன். எனவே இருவரும் பிரசாரத்தில் இறங்கிவிடலாம்;...........வேறு கட்சிகளில் பெண் தலைவர்கள் கிடையாது. அன்றியும் ஜமீன்தாராணியாகிய நீயே கட்சித்தலைவியாவ தென்றால்...........நல்லது காந்தா! நாம் வெளிவந்தால் வெகு ஏராளமாகவே தர்மம் செய்திருக்கிறோமென்றும், பொதுஜனங்களின் மீது கருணை காண்பிப்பவரென்றும் முற்றிய ரிக்கார்டுகள் ஏதுவேனும் வேண்டாமா?

காந்தா:—இதனையெல்லாம் நான் முன்னாடியே பார்த்துவைத் திருக்கிறேன். நம் ஜமீனில் எத்தனை பேர்கட்கு தானதருமம் செய்திருக்கிறோம். நம் விருப்பத்திற்கு மாறாகவெனினும் டொனேஷன்கள் கொடுக்கவில்லையா? ஒரு ஜமீனென்றால் எத்தனை நன்கொடைகள் நிகழ்ந்திருக்கலாம்? அவற்றிற்கெல்லாம் ஒரு புது வியாக்கியானம் செய்துவிட்டால் சரிப்பட்டுவிடும். மேலும் நாம் பேசுவதைவிட காசை வீசினால் எத்தனையோ பேர்கள் நமக்காகப் பேச முன்வந்து விடுவார்கள். நம் முனிசாமி கூட்டத்தாரை ஏவிவிட்டு விட்டால் அம்மம்மா! படியாமல் போனாலும் என்ன பேச்சுப் பேசுவான்! கூட்டங்களில் யாரேனும் கேள்வி கேட்க முன் வந்தால் விடுவானா முனிசாமி?

ஜமீன்:—சரி, பிரசாரத்திற்கு என்னென்ன திட்டம் வைத்திருக்கிறாய்?

காந்தா:—முதலில் சில விஷயங்களை விசதபாராக வேண்டும். பத்திரிகை பொன்றை—ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய பாஷைகளில்—தொடங்க வேண்டும். இந்த காலத்தில் ரூபாய் 50 கொடுத்தால் எழுத்தாளர் என்பதாயிரம் பேர் வருவார்கள். அவர்களில் சிலரை பேச்சாளர்களாகவும் நியமித்து விடலாம். மற்றக் கட்சிக்காரர்கள் கொடுப்பதைவிட 5 ரூபாய் வீதம் அவர்கட்கு ஜாஸ்தி கொடுத்து விட்டால் போதும்; 5000 பேச்சைப் பேசி விடுவார்கள். வேலையின்றி திண்டாடுபவர்கட்காக 'ஒரு பீரோ' வைத்து விடுவதானால் நம் இயக்கத்திற்கு மலைபோல் ஆதரவு வந்து விடும். ஆனால் ஒன்று. நாம் எவருக்கும் சம்பளம் கொடுப்பது தெரியக்கூடாது. கௌரவ ஆசிரியர், கௌரவப் பிரசாரகர் என்றே விளம்பரம் செய்ய வேண்டும். இப்போது சில கட்சிகள் சம்பளம் கொடுக்கும் சங்கதி வெளியே தெரிந்து விடுகிறது.

அப்பால் நம் கட்சியை சினிமாக் கொட்டகைகளில் 'ஸ்லைட்' மூலம் விளம்பரம் செய்யவேண்டும். இரண்டு மூன்று கார்களில் விளம்பர அட்டைகள் மூலம் எங்கும் தெரியப்படுத்த வேண்டும். பிறகு,

பத்திரிகைக்கு 2 தம்படிக்குமேல் விலை வைக்கக் கூடாது. ஏனெனில் இப்போது கூலியாளுக்கு எ...

தனியே பத்திரிகைகள் வந்துவிட்டன. நாம் பத்திரிகைகள் நல்ல காகிதத்தில் அச்சிடப்படவேண்டும்.

அடுத்தபடியாக, சில சகஷிகளில் தனி முறையில் சண்டை போட்டுப் பிரிந்தவர்களும் காங்கிரசில் சிறை சென்று கஷ்டமடைந்தோரு மிருக்கின்றனர். அவர்களை இழுத்துக்கொள்ள வேண்டும்.

அடிக்கடி மகாநாடு கூட்டவேண்டும். அங்கு நிறைவேற்றும் தீர்மானங்கள் மற்ற எந்தக் கட்சியிலுமில்லாதன வாயிருக்க வேண்டும்.

ஹரிஜனங்களை இந்த காலத்தில் பிடித்திழுத்துக்கொள்வது மகா சுலபம். அவர்களை அவசியம் நம் கட்சியில் புகுத்த வேண்டும்.

நாமும் நம் கட்சி ஊழியர்களும் போகுமிடங்களில் பிரமாத வரவேற்பு கிடைக்கும்படியான வழியில் வரவேற்பு ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

பின்னர், தீவிரமாக இப்போது இருக்கும் கட்சிகள் எதுவேனும் தீர்மானம் நிறைவேற்றினால் இலேசாக அந்த தீர்மானத்தை மட்டிலும் ஆதரித்துப் பேசவேண்டும்; எனவே அக்கட்சிக்கு ஆக்கமளித்துவிடலாகாது.

பெண்களுக்கு இடமளிக்கும் கட்சியாகப் பெயரெடுக்க வேண்டுவது மிகவும் அவசியம். நாம் ஏழை விடுதிகளை அடிக்கடி பார்வையிடவேண்டும். சிறுசிறு சங்கங்களை நிறுவவேண்டும்.

இவற்றை யெல்லாம்விட முக்கியம் ஜவஹர், காந்தி போன்றுரை கண்ணை மூடிக்கொண்டு தாக்கவேண்டும்.

இந்த நீண்ட திட்டத்தைக் கூர்ந்துகேட்ட ரங்கராய பாண்டியர் சந்தோஷம் பொலிந்த முகத்துடன் "காந்தா! நீதான் கட்சியின் முக்கிய கொடாவாக விருப்பாய்போல் தோற்றுகிறது" என்று தன் கைகளால் அவளது கோமளக் கன்னத்தில் மெதுவாக அடித்தார். அதனை சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்டு, "சரி; நான் கொடாவாகவிருக்கிறேன். ஆனால் எனக்கு மாதம் ரூபாய் 15 ஆயிரம் 'அலவன்ஸ்' தனியாகத் தந்துவிட வேண்டும்."

"பதினையாயிரமா? 20 ஆயிரம் தருகிறேன்"

"அப்படியானல் இப்பொழுது முதல் தவணையைத் தாருங்கள்."

ஜமீன்தார் யாதும் ஆயாசமின்றி பக்கத்திலிருந்த 'பெல்'லை அடித்தார். ஒரு நவயௌவனம் தாண்டவமாடும் தருணி! அன்னம் போல்கண்ணுக்கணியாக அங்கு வந்தாள்.

ஜமீன்:—பத்மா! செக் புத்தகம் எங்கே?

பத்மா தாமரைப் பாதங்களை எடுத்து வைத்து நடந்து சில நிமிடங்களுள் ஒரு செக் புத்தகத்தையும் பேனாவையும் கொணர்ந்தாள்.

அவற்றைப் பெற்றுக் கொண்ட ஜமீன்தார் "சரி; போ" என்றார்.

பிறகு 20 ஆயிரத்திற்கு செக் ஒன்று எழுதப்பட்டது. அதனை காந்தாவின் கையில் கொடுத்து கல்யத்தில் ஒரு முத்தமும் சமர்ப்பித்தார்.

காந்தா புன்னகையுடன், "இந்தத் தொகை எதற்கு தெரியுமா? நான் சொன்ன யோசனைக்கு பீஸ். இனி மாதச் சம்பளம் வேறு. இன்னும் ஒரு வாரத்தில் கட்சி நிறுவப்படவேண்டும். இன்றே நான் சென்னைப் பத்திரிகைகட்கு எழுதிவிடுகிறேன்" என்றாள்.

ஜமீன்:—அதுதான் உத்தமம்; எலக்ஷன் நெருங்குகிறது. அதற்குள் பகீரதப் பிரயத்தனம் செய்தாவது பிரசாரத்தைப் பூர்த்தி செய்ய வேண்டாமா?

நல்லது நம் கட்சிக்கு என்ன பெயர் வைப்பது?

காந்தா:—ஜனநாயகம், குடி அரசு என்ற இரண்டுக்கும் நடுவில் ஜன அரசுக்கட்சி என்று வைப்பது நலம்.

ஜமீன்:—மெத்த சந்தோஷம்

காந்தா இன்னும் தன் யோசனைகளைக் கூறிக் கொண்டே இருந்தாள். ஜமீன்தார் தான் ஒரு இயக்கத்தின் காந்தியாகி விட்டதாகவே நினைத்து பூரிப்பெய்தினார். அவர் மனக்கண்முன் மகாநாடு நடப்பதாகவும், அதில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஆங்கில, தமிழ், தெலுங்குப் பத்திரிகைகள் பறந்து செல்வதாகவும் தாம் தலைமை வகிப்பதாகவும் ஒரு காட்சி தென்பட்டது.

* * *

III

இரண்டுநாளாயின. அன்றுதான் திங்கட்கிழமை. சரியாக மணி நான்கு ஆனதும், ஆறுமுகம் எளிய உடையை அழகாகக் கட்டி, அங்கவஸ்திரத்தை இடுப்பில் சுற்றி, சமஸ்தானக் கோட்டை அரண்மனையில் ஒரு பக்க வாயிலுக்குள் நுழைகிறான். வாயிலுக்குள் காந்தாதேவி சர்வாபரண பூஷிதையாக ஒரு தந்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாள். அவளது உடலழகால் அவ்அறையே அழகு பெற்றாற் போலிருக்கிறது.

ஆறுமுகம் உட்புகுந்து காந்தாதேவியை வணங்கி ஒதுங்கி நின்றான்.

காந்தா நகைக்கும் கண்களால் பார்த்து, தலையை யசைத்துவிட்டு, "இம்மாலை நீ குறிப்பிட்ட விலை பெறுது என்றுசொல்கிறார்களே நகை வியாபாரிகள்!" என்றாள்.

ஆறு:—தேவியின் இஷ்டம். ஏழை நான் என்ன சொல்வது?

காந்தா:—பதினாயிரம் ரூபாய் நோட்டுகள் இதோ இருக்கின்றன; எடுத்துக்கொள்.

பளிச்சென்று ஒரு உணர்ச்சி மின் அவன் முகத்தில் தோன்றி மறைய, சந்தோஷத்தால் அகன்ற கண்களுடன்:—தேவி கடாட்சம். கொடுத்ததைப் பெற்றுக் கொள்கிறேன்.

காந்தா தேவி ஒரு 50 ரூபாய் நோட்டை வீசி விட்டு "நல்லது செல்" என்றாள்.

ஆறு முகம் என்ன செய்திருப்பான்?



# சினிமா உலகம்

## திரைப்படத்தில் இத்தாலிய ஜயகோஷம்!

அரசியல் போராட்டத்தில் மூழ்கியிருக்கும் முசோலினி, தற்போது சினிமா உலகத்தையும் தீவிரமாய் கவனித்து வருகிறார். 'கார்தேஜ் வீழ்ச்சி' எனும் படத்தைத் தயாரிப்பதற்கென போதிய ஆதரவு நல்கியிருக்கிறார். இதாலிய இராணுவம் 12,000 காலாட் படைகளையும், 3,500 குதிரைப் படைகளையும், அனுப்ப உத்தேசித்திருக்கிறது. 3000 நடிகர்கள் இதில் பங்கு கொள்வர்.

கதையில் கானேயின் கனவும், சிஸிலிக்கு அப்பால் நடைபெறும் கடல் யுத்தங்களும், இறுதியில் ஜாமாவின் புகழ் சிறக்கும் வெற்றியும் வருணிக்கப் படும். 'காமிரா'க் காரர்களுக்கு இஃது ஓர் மகத்தான சந்தர்ப்பம் என்றே சொல்லவேண்டும்.

இத்தாலிய இளைஞர்களுக்கு தாய் நாட்டின் பழம்பெருமையைக் காட்டி தேசபக்தி யூட்டும் எண்ணத்துடனேயே இந்தப் படம் தயாராகிறது. கார்திஜினியர்கள் (வட ஆப்ரிக்காவிலிருந்த கார்தேஜ் நாட்டைச் சேர்ந்த சுதேசிகள்.) தமது மந்திராலோசனை சபைக்குள் ஓர் யானையைக் கொணர்ந்து, அது சமயம் அவர்கள் சபையிலிருந்த ரோமன் தூதனது தலைப்பாகையை தூக்கி எறிந்து அவனை அவமானப் படுத்திய நிகழ்ச்சியை மாணவர்களுக்குக் காட்டுவதால், அவர்கள் வீர உணர்ச்சியுடன் எழுவார்கள் என்பது முசோலினியின் உள்ளக் கிடக்கை. அஃதுடன் நாகரிகத்தின் உச்சஸ்தானத்தைப் பெற்றதோர் ஜன சமூகம் அநாகரிகக் கறுப்பர்களை எதிர்த்துப் போராடி வெற்றிகொண்டதை உலகத்தவர் இப்படத்தின் மூலமாய்க் கொண்டாடுவதற்கும் இடமேற்படுமாம்.

## 43 வயதான நக்ஷத்திரம்

43 வயதான ரத் சாட்டர்டன் என்னும் மாது டாட்ஸ்வர்த் எனும் படத்தில் முக்கிய நடிகையாய்த் திகழ்கின்றாள். பேசும் படக்காட்சிகள் ஆரம்பமாகி முதல் நான்கு வருடங்கள் வரையிலும் இவளே இணையற்ற நடிகை என்று இரு பெரிய கண்டங்களாலும் போற்றப்பட்டு வந்தனள்.

## 43 வயது நடிகைக்கு 32 வயது கணவன்

முன்னர் டக்ளஸ் பேர்பாங்க்ஸின் மனைவியாயிருந்து விவாகரத்து செய்து கொண்ட 43 வயதுள்ள பிரபல ஸினிமா நடிகை மேரி பிக்போர்ட், பாண்டு கோஷ்டியின் தலைவரான 32 வயதுள்ள பெட்டிரோஜர்ஸ் என்பவரை விவாகம் செய்து கொள்ளப் போவதாக ஒரு செய்தி கூறுகிறது.

## நவனி தர்க்காத் பி. ஏ.

இவர் 1915 ஜூலை 15-ஆம் தேதி அவதரித்தனர். அழகின் மிக்க பவளக்கொடி; 5-அடி உயரமுள்ளவர். பிரபாத் சினிடோனின் முக்கிய நடிகையாய் இன்று விளங்குகிறார். 'வசந்த சேனு' என்பதே இவர் நடித்த முதல் படம். பின் பிரபாத் சந்திரசேனு, அமிர்தமந்தன், ரஜபுத்ரரமணி போன்ற உன்னத படங்களில் நடித்து அழியாப் புகழடைந்துள்ள இம்மாதுக்கு ஓவியம் வரைதலில் தேர்ச்சியுண்டு. இந்நங்கையின் (Hobby) மனதிற்கு இனிய தொழில் சித்திரம் எழுதலே.

## துணிகளில் புகைப் படம்

போட்டோ படங்களைப் பட்டுத்துணியிலும் கான்வஸ் துணியிலும் பிடிப்பதற்கு ருஷியாவில் ஒரு நூதன முறையைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அந்தத் துணி வகைகளுக்கள் வெகு சீக்கிரம் ருஷியாவில் விற்பனைக்கு வரும் என்று சொல்லப் படுகிறது.

ஓரியண்டல் பிலிம்ஸின் சேதுபந்தனத்தில் ஒரு காட்சி.

## அகில இந்திய 2-வது சினிமா மகாநாடு

இம்மகாநாடு வரவேற்புக் கமிட்டித் தலைவர் ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார் எழுதுவதாவது:—

"இரண்டாது அகில இந்திய சினிமாப்பட மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க பம்பாய் சாகர் மூவிடோன் முதலாளி திரு. சிமன்லால் பி. தேசாய் ஒப்புக் கொண்டார்.

பிலிம் திருவிழா (இம்மகா நாட்டை அப்பெயரிட்டழைப்ப தென்று தீர்மானித்திருக்கிறது) சென்னையில் டிசம்பர் 26-ந் தேதி ஆரம்பிக்கப்படும்.

நடைபெறப் போகும் இம்மகா நாட்டுக் கூட்டம் குறிப்பிடத்தக்க முக்கிய அம்சமாகும், விரிவான ஏற்பாடுகளுடன் நிர்மாணிக்கப்படுவதில் இம்மகாநாடே முதலாவதாகும். பற்பல மாகாணங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்து சேரும்படியான அரிய சந்தர்ப்பத்தை சென்னை பெற்றிருக்கிறது

இதை நாம் எவ்வளவுக்குப் பயன் படுத்திக் கொள்ளுகிறோமோ அவ்வளவுக்கு நாம் நமது பிற்கால சினிமா தொழிலின் முற்போக்கை எதிர்பார்க்கலாம். அகில இந்திய பிரச்னையல்லாமல், நமது மாகாணத்தைப் பீடித்துள்ள பல விஷயங்களுக்கும் இம்மகாநாட்டில் பரிகாரம் தேடலாம். சலனப்படத் தொழிலில் பற்றுள்ள ஒவ்வொருவரும் இதன் மூலமாக எவ்வளவு நன்மையைப் பெற முடியுமோ அவ்வளவு அதிகமான நன்மையையும் பெற இம்மகாநாட்டு ஸ்தாபகர்களோடு ஒத்துழைக்க வேண்டுமென்று கோருகிறேன்."

## காமிராவில் தீவிர சீர்திருத்தம்

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த பிட்ஸ் பர்க்கிலுள்ள ஓர் நிபுணன் புதியதோர் 'காமிராவை' அமைத்திருக்கின்றானாம். அந்த ஓர் வினாடியை லட்சம் அம்சமாக்கி ஓர் அம்சத்துக்கு எவ்வளவு சமயமாகுமோ அச்சமயத்துக்குள் படப்பிடிப்பு செய்து கொள்ளும்படியான நிபுணத்துவம் வாய்ந்ததாம்.

சுந்தரம் டாக்கீஸாரின் "ராஜபக்தி"யில் ஒரு காட்சி.

## ஹாலிவுட் தமாஷ்!

'ஹாலிவுட் ரிப்போர்டர்' எனும் பத்திரிகையில் மிஸ்டர் ஜான் P. மெட்பரி ஓர் நகைச்சுவை ததும்பும் சமாசாரத்தை எழுதியிருக்கிறார்.

சலனப்பட நடிகை ஒருவள் சமீபத்தில் விவாகஞ் செய்துகொள்ளும் தருணத்தில் அவளது மகள் அழ ஆரம்பித்தாள். அதைக்கண்ட வேலைக்காரன், "குழந்தை ஏன் அழுகிறாள்?" என்று கேட்டான். அதற்கு அவ்வீட்டுத் தாதி, "நீ ஏன் அதை கவனிக்கிறாய்! தன் தாய் கலியாணஞ்செய்து கொள்ளும் போதெல்லாம் இப்பெண் இப்படித்தான் அழுவது வழக்கம்" என்றாள்.

## மாதுரி

சிங்கார ரூப மதி முக வதனி இந்நங்கை. இவர் மருண்ட கண்களைப் பார்த்து மானும் மயங்கி நிற்கும்; நடையை வியந்து நளின அன்னங்களும் தயங்கி மயங்கி நின்றுவிடும். நமது பிலிம் பேலட்டில் 101 வோட்டுகள் பெற்று இரண்டாவது நடிகையாகக் கருதப்பட்டவர். இவரது மாதச் சம்பளம் ரூ. 2500 என்று தெரிகிறது. இவர் ஸ்ரீமான் பி.கே. ராஜா சாண்டோவுடன் ரஞ்சித் படத்தில் நடித்துள்ளார். ஈ. பில்லிமோரியாவுடன் பல படங்களில் நடித்துப் பெயர் பெறுகிறார்.



# புரள்கிறது முஸ்லீம் உலகம்

## 'குர்ஆனுக்கு விவிலியத்தின் கதியே!'

(மாக் எல்ராய் எழுதுகிறார்)

சமூகத்தில் தோன்றிக் கொண்டிருக்கும் எதிர்பாராத் தீவிரமான மாற்றங்களைப்பற்றி பால் சிம்ப்சன் மெக், எல்ராய் என்பவர் 'ஓர்ல்ட் ஆர்டர்' என்னும் பத்திரிகையில் எழுதியிருப்பதின் சாரமாவது:—

நான் கெய்ரோவில் (எகிப்து) ஆசிரியனாய் இருந்தேன். அது காலையில் முதல் வருடத்தில் முகமதிய மாணவர்கள் வெள்ளிக்கிழமை தோறும் மசூதிக்குச் சென்று பிரார்த்தனை பண்ணுவதற்காக விடைபெற்றுப் போவது வழக்கம். இளைஞர்களில் பெரும்பான்மையோர் ரம்ஜான் பண்டிகையின் போது உண்ணாவிரதம் அனுஷ்டித்து வந்தார்கள். இவ்விரத நாட்களின் காலையிலிருந்து மாலை வரையிலும் உணவு அருந்துவது கூடாது. மூன்று வருடங்களுக்குப் பின்னர் மாணவர்களில் ஒருவனே வெள்ளிக்கிழமைப் பிரார்த்தனைக்காக விடை பெற்றுக்கொண்டான். பெயரளவிலுங்கூட ஒருவரேனும் ரம்ஜான் அனுஷ்டிக்கவில்லை. தவிர முன்போல் தெருக்களின் மூலைகளிலும், ரயில் வண்டிகளிலும், வயல்களிலுமாக எங்கும் முஸ்லிம்கள் முழந்தாளிட்டு நசனை வழிபடுவதைக் காண்பது அரிதாகிவிட்டது. ஒரு காலத்தில் இஸ்லாமுக்கு மக்களின்மீது இருந்த ஆதிக்கம் தளர்ந்து வருகிறதென்பதையே இது காட்டுகின்றது.

தற்போது திரு குர்ஆனில் காணுங் கூற்று அனைத்தும் அருளப்பெற்றவைதானா என்று முஸ்லீம் மக்கள் ஆராயத் தொடங்கிவிட்டார்கள். கிறிஸ்தவரின் விவிலியமால் தீவிரமான ஆராய்ச்சிக்காரர்களின் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டுவிட்டது போன்று திரு குர்ஆனும் ஆராயப்பட வேண்டியதாயிற்று. இளைஞர்கள் தமக்குரிய மங்கையர்களைத் தாமே, தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு விட்டார்கள். தவிர, பலரறிய வெளிப்படையாக மணவினைக்கு முன் மாதரை காதலிக்கும் வழக்கத்தைக் கையாண்டு வருகிறார்கள். இத்தகைய சுதந்திரமான உணர்ச்சிகளால் தூண்டப் பெறும் செயல்களால் பழைய வழக்கங்களின் சாவுமணி அடித்து விட்டதென்றே கருத வேண்டியிருக்கிறது.

'எல் ஹஜார்' என்ற வைதீக கலாசாலையில் பதினாயிரக் கணக்கில் சேர்ந்திருந்த மாணவர்களின் தொகை ஐயாயிரமாகக் குறைந்து விட்டது. மாணவர்கள் இக்கலாசாலையை விட்டு விட்டு அரசாங்கக் கலாசாலைகளை நாடி வருகிறார்கள். இக் கலாசாலைக்கு எவ்வளவுதான் மதிப்பு அளிக்கப்பட்ட போதிலும், பல கோட்பாடுகள் தற்காலத்தில் மறுக்கப்படுகின்ற காரணத்தால் முஸ்லீம் மாணவர்கள் எல். அஜார் சர்வகலாசாலையில் சேர்ந்து வாசிக்கத் துணியவில்லை. திரு குர்ஆனின் கோட்பாடுகளை மனனம் பண்ணுவதால் வாழ்க்கைப் போராட்டப் பிரச்னைக்கு பரிகாரம் கண்டு கொள்ள முடியாது. ஆகவே அவர்கள் தமக்கு நல்லறிவையும் விஷயங்களை தைரியமாய் ஆராய்கின்ற மனோசக்தியையும் அளித்து வரும் அரசாங்கக் கல்லூரிகளில் பயிற்சி பெற முயன்றார்கள். தற்கால விஞ்ஞான சாஸ்திரப் பயன் துணைக்கொண்டு கல்வியுலகத்திலேயே ஓர் புரட்சி உண்டாக்கிக் கொண்டார்கள். இங்ஙனம் தாராள நோக்கமுடைய கல்வி ஸ்தாபனங்களிற் சேர்ந்து வாசிக்க ஆரம்பித்து விட்டார்கள். குர்ஆனின் கோட்பாடுகளின் உண்மைகள் ஆராய்ச்சிக் குட்படுத்தப்பட்டன, எனவே இம் மாற்றங்களுக்கு இடங் கொடுப்பது பெரியதோர் மதத் துரோகம் என்று நினைக்கப்பட்ட காலம் மலையேற ஆரம்பித்துவிட்டது.

மனித சமூகத்தில் ஏற்பட்டு வரும் மாறுதல்களுக்கு இடங் கொடுப்பதற்கு ஏற்ற சக்தியை இஸ்லாமியர் வளர்த்து வரவேண்டும். இஸ்லாமின் எதிர்காலம் இச்சக்தியைப் பொறுத்துத்தான் இருக்கிறது. இன்னுஞ் சில அரிய மாற்றங்களைக் கவனிப்போம்.

ஆண்டவன் சாம்ராஜ்யாதிபத்தியமென்று அழைக்கப்பட்ட இஸ்லாமிய உலகம் தேசிய உணர்ச்சி யென்னும் வெடிகுண்டு வீழ்ச்சியினால் தெறிக்கப் பட்டுவிட்டது. இதுவரையிலும் தாம் ஒரு முஸ்லீம் என்பதை எண்ணி வந்தவர்கள், முஸ்லீம் உணர்ச்சி மிக்க நாடுகளில் இருந்தும் தற்காலத்தில் ஸிரியன், எகிப்தியன், துருக்கன், என்று தனது தேசியப் பெயரால் அழைத்துக் கொள்ளுதலையே உரிமையும் பெருமையுமாய்க் கருதி வருகின்றனர். மதக் கடமைக்கு முன் தேசியக் கடமையே உயர்வு அளிக்கப் பெற்று வருகிறது. தமது சமூகத்திற்குச் செய்யுங் கடமை மதத்திற்குப் புரியும் சேவையினும் பெரிதான மதிப்பைப் பெற்று விட்டது.

சில வருடங்களுக்கு முன்னர் முஸ்தபா கெமால் பாஷா, கிலாபத்தை அழித்து, சுல்தானின் ஆதிக்கத்தையும் வேருடன் கல்லி எறிந்து விட்டதன் பயனாய் முஸ்லீம் உலகத்தைக் கட்டியாண்டுவந்த ஒருமை உணர்ச்சி சிதறுண்டு போயிற்று. துருக்கியில் இன்று மேல்நாட்டு நாகரிகம் தாண்டவ மாடுவதைக் காண்கிறோம். அரபி எழுத்துக்களுக்குப் பதிலாக [illegible] எழுத்துக்களும், கீழ் நாட்டு உடைகளுக்குப் பதிலாக மேல் நாட்டு உடைகளும் புகுத்தப் பட்டிருக்கின்றன. ஆரம்பகாலங்களில், கிறிஸ்தவக் கொள்கைகளை, உலகாயதக் கொள்கைகள் எதிர்த்து வந்தது போலவே, தற்கால விஞ்ஞான அபிவிருத்தியால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மாற்றங்கள் இஸ்லாமின் சக்தியை குறைத்து வருகின்றது.

பல நூற்றாண்டுகளாக அங்கீகரிக்கப்பட்டுவந்த ஆசாரங்களை ஏற்றுக் கொள்ள தற்கால இளைஞர்கள் மறுக்கிறார்கள். நவீன ஆராய்ச்சிகளின் ஒளியைப் பெறுவதற்கு வழியின்றி அந்த காலத்தில் ஆழ்ந்திருந்த அவர்களது உள்ளம் பாரம்பரையாக போற்றப்பட்டு வந்த அதிகாரங்களுக்குக் கீழ்ப்படியக் கூசுகின்றது. அவர்கள் மனம் புதுக் கருத்துகளை அறிய மிக்க ஆவல்

# அபேதவாதமும் தனவணிகர்களும்

(திரு. M. RM. M. இராமனாதன், மெக்ட்டிலா)

இன்று நம்மிந்தியாவில் எங்கு பார்த்தாலும் அபேதவாதத்தைப்பற்றி பேசப்பட்டு, எழுதப்பட்டு வருகின்றது. காரணம் நம் ஜவகர்லால் என்பதை யாரும் மறக்க முடியாது. அபேதவாதத்தைப்பற்றி இவர் ஊரூராய் அதிதீவிரப் பிரசாரம் செய்துகொண்டு வருகின்றார். இந்தியா க்ஷேமமடைய வேண்டுமானால், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியவேண்டுமானால், கொடிய வறுமை நீங்கவேண்டுமானால், பசிப்பிணி தொலைய வேண்டுமானால், அபேதவாதம் ஒன்றினால்தான் முடியும் என்பது அவரின் ஆழ்ந்த கொள்கை. நம்மிந்தியாவின் இன்றைய நிலைமையை நன்கு ஆராய்ந்து பார்ப்போர்க்கு ஜவகர் சொல்வது எவ்வளவு தூரம் உண்மை என்பது தெற்றென விளங்கும். இன்று அபேதவாதம் நம் நாட்டில் அதிதீவிரமாய் பரவி வருகின்றது. மூக்காலேமூன்று வீசம் பேர் இதை ஆதரிக்கத் தொடங்கிவிட்டார்கள். ஆனால் ஒரு சில பணக்கார தனவணிகர்கள் ஜவகரைக் கண்டிக்க முற்பட்டிருக்கிறார்கள். இவர்கள் ஜவகரைக் கண்டிக்க முற்பட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஏன்? மாடமாளிகை கூடகோபுரங்களில் பரிவாரங்களோடு இன்பசாகரத்தில் ஆழ்ந்திருந்தவர்களுக்கு, ஜவகரின் அபேதவாதக் கொள்கை எவ்விதம் பிடிக்கும்? தற்பொழுது தனவணிகர்களில் பெரும் பகுதியோர் காங்கிரசையும் அபேதவாதத்தையும் ஆதரிக்கத் தொடங்கி விட்டார்கள். இவ்வித நிலைமையில் ஒரு சிலரின் எதிர்ப்பு எவ்வளவு தூரம் வெற்றியடைய முடியும்? யாரும் எவ்வளவு தூரம் எதிர்த்த போதிலும் அபேதவாதம் நம்மிந்தியாவுக்கு கண்டிப்பாய் வந்தே தீரும். கோடிக்கணக்கான ஏழைகள் அன்றாடம் உழைத்து ஒரு வேளை சாப்பாட்டிற்கு வகையில்லாது திண்டாடும் பொழுது—M. A., B. A. படித்து விட்டு பூட்ஸ் துடைப்பதற்குக் கூட வேலையில்லாது அவதிப்படும் பொழுது—இதற்கு அநுகூலமான அபேதவாதத் திட்டத்தை யார் மறுக்க முடியும். இன்று நம்மிந்தியாவில் எவ்வளவு கொள்ளை, கொலை, களவு நடக்கின்றன! ஏன்? வேலையில்லாததினாலும், பசிக் கொடுமையாலுமன்றோ? இவர்களுக்கு வகை சொல்லித்தீராத வரையில், சில பணக்காரர்களும், பட்டதாரிகளும், சர்க்கார் தாசர்களும், எவ்வளவு நாளைக்கு சுகமாக வாழ முடியும்! "இந்தியாவிலுள்ள வறுமை, வேலையில்லாக் கஷ்டம், இதர துயரங்கள் முதலியவற்றுக்கு என்ன பரிகாரம் என்பது உண்மையான, அவசரமான பிரச்னையாய் விட்டது. இந்த பிரச்னையைத் தீர்க்க வழி கூறுவோர் இருந்தால் அபேதவாதத்தை விட்டு விடுகிறேன்" என்று முழக்குகிறார் ஜவகர். இதற்கு வழி அவர்களால் என்ன சொல்ல முடியும். இந்தியாவிலுள்ள ஏழைகளுக்கு வேலையும் கொடுத்து, சாதமும் போடுவென்றால், எந்தப் பணக்காரன் முன் வருவான்? பணக்காரன் எவனும் தான் சுகமாய் வாழ நினைக்கின்றானேயொழிய கோடிக்கணக்கான ஏழை மக்களும் தன்னைப்போல் சுகமாய் வாழ்விட நினைக்கின்றானா? அவ்விதம் நினைத்திருந்தால் ஜவகரைக் கண்டிக்க இடமில்லையன்றோ? ஆனதினால்தான் ஜவகர் என்ன சொல்லுகின்றார்: பசிப்பிணி தொலைய, வறுமை நீங்க வேலையில்லாக் கஷ்டம் ஒழிய, இந்தியா க்ஷேமமடைய, அந்நியர் கையிலிருக்கும் சர்க்காரைக் கைப்பற்றி, அதன் மூலமாய் எல்லாச் சொத்துக்களையும் பொதுச் சொத்தாய் ஆக்கி, ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமில்லாமல் எல்லோரும் சுகமாய் அநுபவிப்போம் என்கின்றார். இதில் என்ன கெடுதல் இருக்கின்றது? அவர் சொல்வதை நன்கு யோசிக்காமல் அவரைக் கண்டிப்பதென்றால் அதில் என்ன அர்த்தம் இருக்கின்றது? அபேதவாதத்தைப் பற்றி பிரசாரம் செய்யும் ஜவகரே ஒரு கோடீஸ்வரரின் புதல்வர் என்பதை நாம் மறத்தலாகாது. காங்கிரசிற்கே முழு விரோதிகளான சுயமரியாதைக்காரர்களே இப்பொழுது காங்கிரஸ் அபேதவாதத்தில் சேர்ந்து விட்டார்களென்றால், அபேதவாதத்தின் தன்மை எத்தகையதாய் இருக்க வேண்டும்? ஆகையால் ஜவகரின் அபேதவாதக் கொள்கையை, இன்றைய நிலைமையில், ஒரு சில பணக்காரர்களும், சர்க்கார் தாசர்களும், சேர்ந்து கொண்டு ஒடுக்கிவிடுவோம் என்பது முடியாத காரியம். வீண் பிரயத்தனப்பட்டு அவமானம் அடைவதைத்தவிர, வேறொன்றும் செய்ய முடியாது. இதை நாம் சமீபத்தில் கோயிலூரில் நடந்த நகரத்தார் கூட்டத்தில் நிதரிசனமாய் கண்டுவிட்டோம். ஒரு சில பணக்காரர்களும், பட்டதாரிகளும், போலீசும் சேர்ந்து கூட்டத்தைக் கலைக்க எவ்வளவோ முயன்றும் பயன்பெறாமல் பெருத்த தோல்வியடைந்தனர். கூட்டம் வெற்றிகரமாய் முடிந்ததோடு காங்கிரஸிற்கு அபரிமிதமான வெற்றி கிடைத்திருக்கின்றது. எவ்வளவு நாளைக்கு இவர்கள் சுகமாய் வாழ எதிரி பார்த்துக் கொண்டிருக்க முடியும்? அக்காலம் மலையேறிவிட்டது. எல்லோரும் சரி சமமாக வாழ நினைத்தால்தான் இனி மேல் பெருமை உண்டு.

'எல்லோரும் இன்புற்று வாழ
[நினைப்பதுவேயல்லாமல்
வேறொன்றறியேன் பராபரமே'

---

நொண்டு தவிக்கின்றது. ஜெர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து, அமெரிக்க சர்வகலாசாலைகளில் பயிற்சி பெற்ற மாணவர்கள் தமது தாய்நாடுகளுக்குத் திரும்பியதும், தமது விரிந்த நோக்கங்களையும் பரந்த அறிவையும், நாட்டு மக்களின் தலைவர்கள் என்ற நிலைமையில் பயன்படுத்த முயல்கின்றார்கள். விஞ்ஞான முற்போக்கு தற்கால முஸ்லீம் மாணவர்களின் மனோ நிலைமையில் மாற்றத்தை உண்டுபண்ணி விட்டது. புகுதற்கு முடியாத பெருங் கற்கோட்டைக் கொப்பான முகமதிய உலகத்தை விஞ்ஞான அறிவென்னும் 'கடப்பாறை' சிறிது சிறிதாகத் தகர்த்து வருகின்றது.

இச்சிறு கட்டுரையில், சமய, சமூக, அரசியல் துறைகளில் முகமதிய உலகம் அடைந்து வரும் மாற்றங்களைப் பற்றிக் கூறுவது அனாவசியமாகும். இம்மாற்றங்கள் பெருங்கிளர்ச்சிகளை விளைவித்து பயங்கரத் தோற்றத்தை உண்டுபண்ணி, அதன்பயனாகத் தோன்றியனவல்ல. ஆயினும் இஸ்லாமிய உலகம் இதுவரையிலுங் கண்டிராததான ஓர் இறுதியான போராட்டத்திற்குத் தயாராகி வருகிறதென்று சொல்வது மிகையாகாது.



### சயிப்பி (பர்மா)

#### மகாத்மா காந்தியடிகளின் படத் திறப்பு விழா

20-ம் தேதி தீபாவளியன்று தமிழ் மக்கள் அனைவரும் கதர் ஆடையணிந்து உலகப் பெரியாராகிய மகாத்மா காந்தியடிகளின் திருவுருவப் படத்தை மேள வாத்தியங்களுடன் காலை எட்டு மணிக்கு ஊர்வலமாகப் பர்மியர்களுடன் குகப்பெருமான் திருவாலயஞ் சென்று சுவாமி தரிசனஞ் செய்து அவ்வாலயத்திற்குப் பக்கத்திலுள்ள அன்னதான மடத்தில் மகாத்மா காந்தியடிகளின் படத்தைக் கொண்டுபோய் வைத்து இவண் வதியும் திருவாளர் கரு. வி. சொ. வீரப்பா அவர்களை ஏகமனதாகச் சபையோர் தேர்ந்தெடுத்து அடிகளின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்குமாறு கேட்டுக்கொண்டதற் கிணங்க, படத்தை திறந்துவைத்தார்கள். வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. இளைஞர்கள் கடவுள் வாழ்த்துப் பாடினார்கள்.

பிறகு, திரு. பழ. ராமசாமியும், நா. சுப்பிரமணியமும் "தீண்டாமை" என்னும் சம்பாஷணை பற்றியும், திரு. சா. விஸ்வனாதன் "சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை" என்பதைப் பற்றியும், திரு. ராம. பழனியப்பன் "சங்க முன்னேற்றம்" என்பதைப் பற்றியும், திரு. மு. பழனிவேலு "கதர்" என்பதைப் பற்றியும் பேசிய பின், திரு. நா. ராமசாமி தேசிய கீதம் பாடியதும், தமிழ் மக்கள் இவ்வூரில் சங்கமில்லாக் குறையை நிவர்த்திப்பான் வேண்டி ஓர் சங்கம் நிறுவவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டதற் கிணங்க, ஏகமனதாய் "மகாத்மா சங்கம்" என்று பெயரிட்டு அதுபோல் முடிவு செய்து கொள்ளப்பட்டதும், தலைவரவர்கள் இம்மாதிரி கூட்டங்கள் கூட்டுவது அவசியமென்றும், கதர் எல்லோரும் அணியவேண்டுமென்றும் சொல்லி அமர்ந்தார்கள். —ஒரு நிருபர்.

4



# பாரதத் தாய் வணக்கம்

பாலபோதகர்
பதுவை மு தங்கமணிப் பிள்ளை,
(நற்சாந்துபட்டி)

(1)

தாயே! பாரதி யே!—உயர்
தவமே! தவச் சுடரே!
பாயும் மடைபோ லே—தமிழ்
பாடிடும் பாவலர் தம்
தூய உளத்தினி லே—வாழும்
தோகையே! பாரதி யே!
சேய்பிழை நீ பொறுத்து-அம்மா!
சீக்கிரமே வருவாய்.

(2)

அன்னைதனை மறந்து—ஓடி
ஆடித் திரி குழந்தை
பின்னே பசித் ததுவும்—பெற்ற
தாயினைத் தேடுதல் போல்
அந்நியர் ஆட்சியி லே
—அந்தோ!
அம்மா! உனை மறந்தேன்;
இன்னே நினைந்து கொண்டேன்
—அம்மா!
இனியுனை யான் மறவேன்.

(3)

உன்னை நினைக்கையிலே!—எந்தன்
முன்னோருரைக ளெல்லாம்
மின்னொளி போலவே தான்—என்
சிந்தையில் தோன்றுதடி!
சின்னஞ் சிறுவ னம்மா—நான்
செய்பணி தன்னையும் நின்
பொன்மணி வாய் திறந்து-சற்றே
புகன்று நீ செல்வாயடி!

(4)

சொந்த நலம் வேண்டேன்
—இனிச்
சுந்தரத் தேவியே நின்
எந்தப் பணி யேனும்—நான்
இயற்றத் துணிந்து கொண்
[டேன்;
தந்தையும் தாயுமே நீ—உடன்
சோதரர் தானுமே நீ
வந்தனை பல செய்தேன்—என்
வாழ்வே பாரதி யே!

(5)

சீற்றம்நீ கொள்ளாதே—இனிச்
சிந்தை குளிர்ந்தி டம்மா!
ஆற்றல் மிக வருள்வாய்—நினக்
காகும் பணி யறைவாய்;
சோற்றை மறந்தாலும்—நின்
சொல்லை மறக்கேனே!
ஏற்ற பணி புரிவேன்—என்
இன்பமே! பாரதி யே!

# தொண்ணூற்றுறார் நகரத்தார்களுக்குப் பாராட்டு

“நகரத்தார் கூட்டம்” என்று தாதுஸ்ரீ ஐப்பசி 28உ (13-11-36ந் தேதி) ‘ஊழியன்’ தலையங்கம் தாங்கி நின்றது கண்டேன். “நகரத்தார் அவர்களுக்கு விண்ணப்பம்” “நகரத்தார் கூட்டம்” என்று வெளியாகியுள்ள அறிக்கைகளைப் படித்த பின் ஒருவாறாக உண்மை புலனாயிற்று. மறுவாரம் ‘ஊழியன்’ செய்தி தருவான் என்று எதிர்பார்த்து ஏங்கி இருந்தேன். அதற்கிடையில் ‘தமிழ் நேசன்’ ஆனந்தத் தாண்டவம் கொண்டு தந்தான்.

சென்னை நகரத்தார் சங்கம் 818 பேர்கள் வகிக்கும் ஓர் ஸ்தாபனமென்று 1–10–1936 அங்கத்தினர் ஜாப்தாவில் தெரிகிறது. அதில் எத்தனை பெயர் மனப்பூர்வமாக சொந்த விருப்போடு மெம்பரானவர்களோ? தங்கள் சமூகத்திற்கு தங்கள் வியாபாரத்திற்கு தங்கள் நாட்டிற்கு நலன் பெற முயற்சிக்கப் போகிறோம் என்றாவது வருங்காலத்தில் சங்கம் நமக்குச் செய்யப் போகிற தொண்டை நினைத்தாவது, ஏதாவதொரு வகையில் தன்னம்பிக்கையுடன் அச்சங்கத்தில் சேர்ந்தவர்கள் எத்தனை? அவரவர்களும் தங்கள் தங்கள் இதயத்தில் கை வைத்துப் பார்த்தால் உண்மை உள்ளத்தில் ஒலிக்கும். மலாயாவில் பலரை அங்கம் வகிக்க வேணுமென்று சில பிரமுகர்கள் கெஞ்சியும், சிலரிடம் கையொப்பம் மட்டும் பெற்று சந்தாத் தொகை மற்றொருவர் மணியார்டர் செய்ததையும், அங்கத்தினர் சேர்க்கக் கையாண்ட வித்தைகள் யாவும் பொது ஜனங்களும் நகரத்தார்களும் அறியாமலில்லை. ருசுப்படுத்த முற்பட்டால் தாட்சண்யத்திற்காகவும் தயவுக்காகவும் மெம்பரானவர்கள் நிலை யென்னவாகுமென்பதை வாசகர்கள் அறிவார்கள். மெம்பர்கள் சேர்த்த வித்தையும் சந்தா வசூல் தந்திரமும் ஒருபுறமிருக்கட்டும். சங்கம் நகரத்தார் சமூகத்திற்குச் செய்துள்ள சேவையைச் சிறிது நோக்கலாம்.

ஒரு சிலர் கவர்மெண்டு ஸ்தாபனங்களில் ஸ்தானம் வகிப்பதற்காகவும், ‘பட்டே! பட்டே!’ பட்டங்களைப் பிரிட்டிஷாரிடமிருந்து பெறவும் தங்களை உயர்வுபடுத்திக் காட்டி இறுமாப்பை வெளிப்படுத்திக் கொள்ளவும் உபகருவியாக உபயோகப் படுத்தப்பட்டதேயன்றி நகரத்தார்கள் சமூகம் பயனடையும்படி செய்துள்ள நன்மை யாது? சட்டசபை, கார்ப்பரேஷன் முதலிய ஸ்தானங்களில் அங்கம் வகித்தற்கு எத்தனையோ நுண்ணறிவாளர்கள் நகரமணிகளாயிருந்தும், சிலர் சுயநலப் பணக்காரர்கள் மட்டும் மாறி மாறி வந்து நியமனம் பெறுவதிலிருந்து உண்மை புலனாகவில்லையா? இது போன்ற பல ஊழல்களை நகரத்தார்கள் நன்கறிவார்கள். அறிந்திருந்தும் சிலர் பயத்தாலும், சிலர் சுயநலவெண்ணத்தாலும், பலர் நமக்கென்ன என்ற கவனிப்பற்ற தன்மையாலும்தான் ஒரு சிலர் பணக்காரர்கள் என்ற யெண்ணத்தில் “அவர்கள் இஷ்டம் சமூகச் சட்டம்” என்று யெண்ணும் நிலையிலிருப்பதாகக் கருதி சென்னை நகரத்தார்கள் சங்கத்தின் மூலம் தொண்ணூற்றுறார் நகரத்தார்கள் பெயரால் அக்கிரமம் செய்ய முயற்சிக்கிறார்கள். அவர்கள் சொந்த ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளும் சில முயற்சியோடு திருப்தியடைந்திருந்தால் யாரும் கவனிக்கப் போகிறதில்லை. இன்றைய நிலையேற்பட்டிருக்கவும் மாட்டாது.

ஒவ்வொரு நாடும், ஒவ்வொரு சமூகமும் ஒவ்வொரு தனி நபரும், விடுதலை, சுதந்திரம், சமத்வம், சகோதரத்வம் என்று ஜெபித்து வாழுமிக்காலில் சில பணக்காரர்கள் சேர்ந்து ஐம்பதினாயிரம் ஜனத்திரள் நிறைந்த நகரத்தார் சமூகத்தை கேவலம் பூச்சி, புழு, மிருகங்களைப் போல கட்டுப்படுத்த நினைத்தால் அதை கண்டிக்கத் தக்கதேயன்றோ? அடிமை கொள்ளும் நோக்கங் கொண்டவர்களின் அற்பபுத்தியை விரட்டி நட்பின் நயத்தைப் புகட்ட வேண்டியது எனையோர்களின் கடமையாகும்.

சீர்திருத்தம், வியாபாரம் முதலியவைகளில் சென்னை நகரத்தார் சங்கம் முனைந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். பெண் மார்க்கட் கிராக்கி போம் ஒழியவில்லை. வாலியர்கள் தேம்பித்திரிதலைத் தேடுவாருமில்லை. பால்ய மணம் பலர் அறிய நடக்கின்றது. இன்னும் வகை வகையான சீர்திருத்தம் நகரத்தார்கள் சமூகம் பெறவேண்டியதிருக்க, அதைக் கவனியாதும் வியாபார விருத்தியைப் பற்றிய சிந்தனையுமில்லாது, காங்கிரஸில் சேரும் நகரத்தார்களைக் கட்டுப்படுத்த முனைந்தவர்களின் மதி சென்றவாறென்னே!

சமூக சீர்திருத்தம், வியாபாரம் இவ்வாறிருக்க நகரத்தார்கள் வாசஸ்தலத்தைச் சிறிது நோக்குவோம். அவர்கள் சொந்த வூர்களில் தண்ணீர் வசதி கற்பனை யுலகில் காண வேண்டியுளது. சில குளம் குட்டைகளிலுள்ள ஜலத்தை நினைத்தால் நடுக்கம் நம்மை மீறி வெளிப்படுகிறது. ஸ்தாக்களை நினைத்தாலே போதும்—சிவப்புச் சாயம் நிறைந்துவிடும். பச்சைதரும் மரங்கள் தண்ணீரில்லாது அக்கினி பகவானை ஆலிங்கனம் செய்யத் தாவுகிறது. சாக்கடை கழிவுக்கு வசதி கிடையாது. வரைந்துகொண்டே போகலாம் சுகாதாரக் குறைகளை. இவைகளை நிவர்த்திக்க யாரேனும் முயற்சித்திருப்பின் நாடு நலனடைந்து போகுமல்லவா? நகரத்தார்கள் வசிக்கும் கிராமங்களுக்கு, நகரங்களுக்கு ஆற்றுத் தண்ணீர் கொண்டுவா ஏற்பாடு செய்ய வேண்டும் வாருங்கள் என்று சென்னை நகரத்தார் சங்கம் வேலை செய்திருப்பின் எவ்வளவு குதூகலமாக விருந்திருக்கும்!

நவம்பர் 14வில் கோவிலூர் மகாநாடு விபரீதமான முடிவேதேனும் ஈன்றுவிடுமோ வென்றஞ்சினேன்; ஆனால் 21–11–36-ல் வெளிவந்த ‘தமிழ் நேசன்’ நகரத்தார் சமூகம் பெற்றுள்ள வீரத்தை, சுதந்திர தாகத்தை, சமத்வ நோக்கத்தை உலகுக்குக் காட்டிவிட்டதென முழங்கியது கண்டு மகிழ்வுற்றேன். நகரத்தார் மகாநாட்டிற்கு வந்தவர்கள் காங்கிரஸ் நகரத்தார் அதிகமாக மகாநாட்டிற்கு வந்ததும் காணுநொத்தானோடு நின்றுவிட்டதாக நேசன் செப்புகிறது. இச்செய்கை சூழ்ச்சியாளர்களின் வீழ்ச்சிக்கு முதற்படி யென மதிக்கலாம்.



காங்கிரஸ் தலைவர் ஜவஹர் மீது அபேதவாதக் குற்றம் காண்கிறது. சென்னை நகரத்தார் சங்கம். அது அறியாதார் செய்கையென அழகு பெறச் சித்திரிக்கிறான் நமது “ஊழியன்”. ஜவஹர் ஓர் தரித்திரனன்று. அன்னியன் உழைப்பில் ஜீவனம் செய்ய விரும்புபவருமல்ல. பிறர் பொருளைத் திரட்டி தானம் செய்ய சிந்திப்பவருமில்லை. கவர்னர் பதவியோ அன்றி இன்னும் உயர்ந்த ஸ்தானத்தை விரும்பினுல் கொடுக்க அதிகார வர்க்கம் தயங்காது. ஏழ்மையை நீக்க விரும்பும் அவருக்கு அவைகள் துரும்பாக மதிக்க ஏதுவாயிற்று என்பதை அறிஞர்கள் நன்கறிவார்கள். நகரத்தார்கள் சமூகத்தில் இருக்கும் பணக்காரர்களிலும் சிறந்த பல முதலாளிகள், தேசத்தின் மானத்தைக் காக்க விரும்பியுழைக்கும் காங்கிரஸின் அங்கத்தவராய் மிளிர்வதிலிருந்து அதன் சீரிய நோக்கும் தலைவரின் பெருமையும் நன்கு விளங்கும். இந்தியாவில் ஏழைகளின் ரட்சிப்பே தனது கொள்கை, கடமை யென்று பணியாற்றி வரும் ஸ்தாபனங்களில் காங்கிரஸ் மிக மிகப் பெரியது. தியாகிகள் நிறைந்தது. என்பதை யாரும் எந்த தேசத்தினரும் மறுக்க முடியாது. உண்மை ஒருபுறமிருக்க சென்னைச் சங்கம் அறிந்தோ அறியாமலோ ஜவஹரையும் காங்கிரசையும் இழுத்து இழுக்குத் தேடிக்கொண்டது மிகவும் வருந்தத்தக்கது. அவர்கள் கையாளும் ஒவ்வொரு விஷயங்களையும் பார்க்கும்போது காங்கிரசைத் தூற்றவேண்டுமென்ற நோக்கோடும் அதில் சேராது மற்றவர்களை மறைமுகமாகக் கட்டுப்படுத்தவும் நகரத்தார் மகாநாட்டைப் பயன்படுத்திக் கொள்ள சங்கத்தார்கள் விரும்பினார்கள் என்றால் தவறாகாது.

14–11–36-ல் கூடிய நகரத்தார் மகாநாட்டிற்கு தலைமை வகித்த மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களை நகரத்தார் சமூகம் நன்கறியும். தேசத் தொண்டும் சமூகத் தொண்டும் தியாகமும் பூஷணமாகப் பூண்ட அவர்களின் தலைமையில் நடைபெற்ற மகாநாட்டின் சிறப்பை என் போன்ற இளைஞன் விரிப்பது மிகை. அம்மகாநாட்டின் தீர்மானங்கள் சமூகத்திற்கு இன்றியமையாதன. தீர்மானங்களை ஆக்க வேலையில் பரிணமிக்க செய்தல் நகரத்தார்களின் நல்லுழைப்பில் காணலாம். அன்பை அதிகாரம் வெல்ல முடியாது. நகரத்தார்கள் தைரியமாக ஒற்றுமையுடன் தீவிரமாக முயற்சியைக் கைக்கொண்டால் எவ்வளவு செல்வச் செருக்குடையவர்களாக விருப்பினும் பணிய வைக்கவியலுமென்பது திண்ணம்.

ஒரு சமூகத்தார் கூட்டத்திற்கு அதே சமூகப் பிரமுகர்கள் நால்வரை பிரவேசிக்கக் கூடாதென 144 தடையுத்தரவு வழங்கியிருக்கின்றது அதிகார வர்க்கம், அதற்கு பெருமுயற்சி யெடுத்துக் கொண்ட பெரியார்கள் என்ன பாடுபட்டார்களோ இந்த உத்தரவு சாதாரச் செய்ய? இந்த 144 சட்டத்திற்கும் அடாத செயலுக்கும் அஞ்சாத வீரசிங்கங்கள் அதில் இருப்பதை யறிந்தும் இச்செய்கைக்கு உடந்தையானவர்கள் கருத்தென்ன? நகரத்தார்கள் மகாநாடு கலகம் உண்டு பண்ணும் நோக்கோடு அல்லது ஏதேனும் சூதுகள் நடைபெறுமென்ற அபிப்பிராயம் கொண்டு கூட்ட நினைத்திருக்க ஏதுவில்லை. அப்படியிருந்தும் கூட்டத்திற் கலந்து கொள்ளவியலாது சிலருக்கு தடைச் சட்டம் தருவித்தது எற்றுக்கு? ஒருவாறு சூழ்ச்சியாளர் குறைகளை தெளிவுப்படுத்திப் போடுவார்கள் என்ற பயமா? இன்றேல் பல நபர்கள் உண்மையைக் கூறுது தடையேற்பட்டு மென்றெண்ணியிருக்கலாம். குறிப்பிட்ட சிலரைத் தடுத்து மகாநாடு நடத்த விரும்புபவர்கள் சமூகத்திற்கு எதனை விளக்குவார்கள் என்பதை தொண்ணூற்றுறார் நகரத்தார்கள் சிறிது சிந்திக்க வேண்டும். சமூகத்துக்கு நன்மை புரிய முயலுவதாகக் கூறுபவர்கள் தடைச் சட்டத்தின் மூலம் நகரத்தார்களை தடுத்தது மதியீனமா? பணத்திமிரா?

பல்காரர்களை வாடகை கொடுத்து நிறுத்திக் கொண்டார்களென நேசன் கூறுகிறது. பணம் செய்தற்கரியதை உணர்ச்சியும் ஊக்கமும் செய்யுமென்பதை நிரூபித்து விட்டார்கள் 14–11–36-ல் கோவிலூரில் கூடிய நகரத்தார்கள். அவர்கள் முயற்சி மிகவும் பாராட்டத்தக்கது. மகாநாடு நகரத்தார்கள் சரித்திரத்தில் முக்கிய ஸ்தானம் வகிக்க ஏதுவாகவுள்ளதென்று மறுப்பதற்கில்லை. காங்கிரஸில் ஒவ்வொரு நகரத்தாரையும் அங்கம் வகிக்கும்படி பிரசாரம் செய்கிறதோர் தீர்மானம். அதனைப் பின்பற்றி நகரத்தார்கள் யாவரும் காங்கிரஸில் மெம்பர்களாகச் சேர்ந்து சமூகத்திற்கும், தேசத்திற்கும் தங்களாலியன்ற நன்மைபுரிய வேணுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

பிரிட்டிஷாரின் பட்டம் பதவிகளை விரும்புவோர் இந்தியாவின் நன்மையை எதிர்பார்ப்பது எங்ஙனம்! அடிமைப் படுத்துவோரிடம் பழகும் அடிமை கொள்ளத்தான் அவாவுறும். புல்லடிமைபெறாது பிறந்த நாட்டின் சுதந்திரம் வேண்டியுழைத்தல் மாந்தர் கடன்.

சென்னை நகரத்தார் சங்க அறிக்கையில் சில நகரத்தார்கள் காங்கிரஸில் சேர்ந்திருப்பதாக அறிவித்துள்ளது நோக்கின் அதில் மெம்பராக வுள்ளவர்களே பலர் காங்கிரஸில் அங்கம் வகிக்கும்போது, அதையறியாது வெளியிட்ட அறிக்கையோ வென்றெண்ண வேண்டியிருக்கின்றது. முன்னர் அறியாதிருப்பினும் இப்பொழுதேனும் சென்னை நகரத்தார் சங்க மெம்பர்களும் பலர் காங்கிரஸில் மெம்பராக விருக்கிறார்களென்பதை பிரசாகர்த்தாவுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன். காங்கிரஸில் நகரத்தார்களில் செல்வந்தர்கள் சேரவில்லையே வென பொதுஜனங்கள் ஐயுறலாம். இன்று பல செல்வந்தர்கள் காங்கிரஸைத் தாங்கி நிற்கிறார்களென்பதை கூற விரும்புகிறேன். சென்னைச் சங்கம் 818 அங்கத்தினர்களைக் கொண்டதாக விருப்பினும் ஒரு சில பணமிகள் ஆட்சியிலிருப்பதை நகரத்தார்களுக்கும் பொதுஜனங்களுக்கும் தெரிவிக்க விருப்பம். ஆனதாற்றியே இது பொறிக்கலாயிற்று.

இறுதியாக இம்மகாநாட்டை சிறப்புடன் நடத்திய தொண்ணூற்றுறார் நகரத்தார் அவர்களின் வெற்றியைப் பாராட்டி அவர்கள் செய்துள்ள தீர்மானங்களை நடைமுறையில் ஒற்றுமையுடன் தீவிரமான வேலைசெய்ய நலம் பெற வேணுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

—‘செட்டியார் இளைஞன்’,

மலாயா.

# செட்டியாரெல்லாம் சேருவீரின்றே

(உ. அரு. அருணாசலம் செட்டியார்)

செட்டியாரெல்லாம் சேருவீர் இன்றே! எதில்? நமதன்னையின் அல்லலைக் களைய, அடிமைத் தளையகற்ற, ஆன்றோர் பலர் கண்ட காங்கிரசில்; சேருவீரின்றே. ஏன்? அதனை நாம் சேராவிடில் இந்நாட்டில் எதுவும் நமக்குச் சொந்தமில்லை. எல்லாம் அந்நிய கைக்குட்பட்டுக் கிடக்கின்றன. அவர்களாகப் பார்த்தளித்த சில சுதந்தரங்களும் ஆட்சி புரியும் ஒரு பகுதியினர், அரசியல் தாசர்கள், சில பட்டதாரிகள் வசம் சிக்குண்டு கிடக்கின்றன. அதை ஒழித்து நாம் நாமாகவே வாழவேண்டுமெனின், நமது மக்கள் அனைவோரும் காங்கிரசில் சேரவேண்டும். அன்னையின் தளைகளைவதே அருந்தவமெனப் பூணவேண்டும்.

இதை உணர்ந்தே நமது நகரத்தார்களில் பலர் காங்கிரசில் கலந்திருக்கின்றனர். இன்னும் கலந்து ஏற்ற தொண்டாற்றப் பலரிருக்கின்றனர். இதனை விளக்கி விட்டது கோவிலூர்க் கூட்டம். அக்கூட்டத்தை நமது இளைஞர்கள், காங்கிரஸ் வீரர்கள், தேசத்தியாகிகள் ஆர்வங்கொண்டு நடத்துவதற்குக் காரணமாய் விளங்கிய கூட்டத்தாரை நாம் என்றென்றும் எண்ணவேண்டியதே. அவர்கள் தூண்டாதிருப்பின் நமது இளைஞர்களுக்கு இத்தனை ஏற்றம் எங்கு கிடைக்கும்! வீரமான செட்டியார் இளைஞர்கள் காந்திக்குல்லாய் அணிந்து இன்மொழி பகர்ந்து, எதுவரினும் ஏற்போம் என்று வீரம் பூண்டதை எவ்விடத்தில் ஒருங்கே பார்ப்போம்? இது ஒன்றே நமது எதிர்காலத்தின் ஏற்றத்திற்கறிகுறியாகும். இத்தகைய மாபெருங் கூட்டத்தை சரியான நகரத்தார் பிரதிநிதித்துவம் உடையதல்லவென்று ஓதினார் ஒரு சுயநலப் பிரியர். அத்தகைய சுயநலப் பிரியர், தனக்கென வாழ்பவர், தன்னலங் கருதுபவர், நமது தனவணிகரிற் பல்லோருண்டு. அவர்களுக்கே நாம் முதலில் நற்புத்தி கற்பிக்க வேண்டும்.

அவர்களோ "செல்வத்தால் நாம் திளைத்திருக்கிறோம். சிறப்பில் மிகுந்து, கீர்த்திபெற்று, பட்டங்களேற்றுப் பதவிகளடைந்து, நல்லுணவுண்டு நாம் வாழ்கின்றோம். நமக்கே எல்லாம் என்றெண்ணுகிறார்கள். அவைகளில் இப்போதுள்ள நிலையில் ஒன்றும் நமது நாட்டுக்கு, நமது மக்களுக்குச் சொந்தமில்லையென்பதை உணரவில்லை. நமது நாட்டில் முன்னோர் தேடிய செல்வங்களை, இன்று ஏழைமக்கள் நெற்றிவியர்வை நிலத்தில் விழப்பாடுபட்டுச் சம்பாதிக்கும் பணத்தை அயலார் அபகரித்துச் செல்வதை அறியவில்லை.

"செல்வ மலிந்தேன், சிறப்பு
மிகுந்தேன் தினந்தினமும்
நல்லுண வுண்டேன். நயம்பலதாங்
கண்டேன், நாவலராய்க்
கல்விகள் கற்றேன், கணக்கே
தெரிந்துமென் காவலரால்
அல்ல லுறுமன்னை வாழ்வடைந்
தன்றோநாம் ஆள்வதுவே"

இதிற் கண்டபடி நமதன்னை விடுதலையடைந்த பின்னரே செல்வம் அத்தனையையும் அடைந்தவராவோம். இதுவரை காங்கிரஸிற் சேராதவரெல்லாம் இன்றே சேருங்கள்.

"காங்கிரஸ் தலைவர் அபேதவாதக் கதைக் கொண்டவர். அதை ஏற்றால் நமது நாட்டுக்கோட்டையார் செல்வமெலாம் போய்விடும்" எனப்பட்ட விருப்பமுறுவோர் சொல்வதை நம்பி ஏமாறுதீர்கள். இந்திய முடிசூடா இளமன்னர் வீரர் ஜவஹர்லால் நேரு பெரிய கோடீஸ்வரர். எந்த நாட்டுக் கோட்டை நகரத்தாருக்கும் ஆஸ்தியிலோ அறிவிலோ அனுபவத்திலோ அந்தஸ்திலோ இளைத்தவரல்லர். அவர் விளம்பும் அபேதவாதம் என்பதென்ன? அதன் பொருளை அறிந்தார் யார்? அவ்வபேதவாதந்தான் எப்போது வேண்டுமென்று கூறுகின்றார்? காங்கிரஸ் தேசிய வாழ்வை ஏற்ற பின்னன்றோ? இன்று அதைப்பற்றிக் கிளர்ச்சி செய்வதெதற்கு? இதை முன்னரே நமது ஊழியன் உங்கட்கு விளக்கி இருக்கின்றான்.

அபேதவாதத்தையுமே நாம் ஏற்றுக் கொள்வோம், அதனால் பலனையடைவது யார்? நமது நாட்டு மக்கள், உடன் பிறந்த சோதரர். இந்திய ஏழையர். இதனால் சேருவது யாது? நமது பாரத மக்களின் வாழ்வு. 'அவ்வபேதவாதத்தை ஒழித்துவிட வேண்டும். அதற்காக இன்று காங்கிரஸை ஆதரிக்கக்கூடாது. அரசியல் தாசரோடு சேரவேண்டு'மென்று அவர்கள் கூறுவதால் நமது தனவணிக மக்களுக்கு ஏற்படும் நலம் என்ன?

நமது பணம் ஏராளமாயிருக்கிற பர்மாப் பிரிவினை. பொருளாதார நெருக்கடியாற் படும் துன்பம் போதாதென்று, இல்லத்தின் செலவுக்கில்லாவிடினும் இன்கம் டாக்ஸ் செலுத்துவது. எல்லோரின் செல்வாக்கையும் திரட்டி யாரோ சிலர் கையிற் கொடுப்பது. இன்னும் எத்தனையோ உண்டு. அனுபவிக்கும் நமது அறிஞர்களுக்கு அதிகம் கூறவேண்டியதில்லை. இப்போது நம்மை வாட்டும் இன்கம் டாக்ஸால் எத்தனை கடைகள் கெட்டன! எத்தனைபேர் கட்ட முடியாது கையிலுள்ள நகைகளை ஈடு வைக்கின்றனர்! இதை எண்ணிப் பாருங்கள். இன்னும் கொஞ்சநாள் அவர்கள் சொல்வதை ஏற்று நடந்தால், இன்றுபோல் இன்கம் டாக்ஸும் மற்ற வரிகளுமிருந்தால், பிறகு நம் செல்வம் எங்கே? அத்தனையும் கப்பலேறிவிடும்.

அதனால் என்ன? நாம் தான் திரைகடலோடித் திரவியம் தேடுவோராயிற்றே. எப்படியும் சம்பாதித்துவிடுவோமெனச் சிலர் எண்ணக்கூடும். அவ்வெண்ணத்தை அறவே விட்டுவிடுங்கள். எந்நாடும் முன்போலில்லை. விழிப்படைந்து விட்டது. நமக்குறுதுணை புரிவது நமது காங்கிரஸ் ஒன்றே. அதில் இன்றே சேருங்கள். தேச விடுதலையைத் தேடுங்கள். இதுவே செட்டியார் எல்லாருஞ் சேர்ந்து இப்போது செய்யவேண்டியதொன்று.



## காரைக்குடி ஜில்லா
### காங்கிரஸ் பிரதிநிதிகள் தேர்தல்

அகில இந்திய காங்கிரஸுக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகள்:—

காரைக்குடி நகரத்தொகுதி

1. சா. கணேசன், S. சுப்பிரமணியம் M. B. B. S.

மானாமதுரை தாலூகா

1. மதுரமித்ரன் N. சுப்பிரமணியம், 2. S காளிமுத்து பிள்ளை, 3. N. ராமஸ்வாமி அய்யர்.

திருப்புவனம் தாலூகா

1. S. P. S. ஷண்முகசுந்திரம் பிள்ளை.

தேவகோட்டை நகரம்

ராம. அருணாசலம், சித. மு. மாரியப்பா.

திருப்பத்தூர் தாலூகா

1. ராம. மு. நாராயணன் செட்டியார், 2. M. மாணிக்கம் நெற்குப்பை 3. ராய. சொக்கலிங்கன், 4. மு. கா. காசிவிஸ்வநாதன், 5. லெ. நடேசன், 6. சு. வீர. வீரப்பன், 7. V. S. RM. வள்ளியப்பச் செட்டியார், 8. கரு. முத்து சிவலிங்கம்.

சிவகங்கை தாலூகா

1. பி. ஈர. சொக்கலிங்கம் செட்டியார், 2. S. நாகஸாமி அய்யர், 3. கா. கண. க. வே. வேலாயுதம் செட்டியார், 4 வெ. வீர. வீரப்ப செட்டியார், 5. ஈா. சி. சிங்கம், 6. S. O. S. P. உடையப்பா, 7. R. V. ஸ்வாமிநாதன், 8. கா. வெ. சேதுராமச்சந்திரன், 9. பி. ஈர. சொ. விசாலாக்ஷி அம்மாள்.

தேவகோட்டை தாலூகா
காங்கிரஸ் கமிட்டி

1. மு. காசிநாதன் தலைவர், 2. T. G. ராமசாமி அய்யங்கார் உபதலைவர், 3. ராம. அருணாசலம் காரியதரிசி, 4. T. N. முகம்மது மொய்தீன் பொக்கிஷதார்.

| | | |
|---|---|---|
| 5. | வெ. மூத்தையா | மெம்பர் |
| 6. | கரு. சி. சொ. ஏகநாதன் | ,, |
| 7. | மு. அண்ணாமலை | ,, |
| 8. | கரு. கா. கார்மேகம் | ,, |
| 9. | பெரி. ராமஸ்வாமி | ,, |
| 10. | சித. மு. மாரியப்பா | ,, |
| 11. | G. சுப்பிரமணியன் | ,, |
| 12. | வீர. வீரபத்திரன் | ,, |
| 13. | ஆ. கோபாலன் | ,, |
| 14. | S. M. CT. நாதன் | ,, |
| 15. | வை. முத்தையா | ,, |

## காரைக்குடி
## ஜில்லா காங்கிரஸ் சபை
### புதிய நிர்வாகிகள் தேர்தல்.

காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் சபையின் புதிய மெம்பர்கள் கூட்டம் நவம்பர் 24ம் தேதி இரவு 9-மணிக்கு காரைக்குடி காங்கிரஸ் மாளிகையில் நடைபெற்றது. அடியிற்கண்டவர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்,

1 திரு. ராய. சொக்கலிங்கன் —தலைவர்.

2 திரு. முரு. அருணாசலம் செட்டியார்—உபதலைவர்

3 திரு. லெ. நடேசன் —காரியதரிசி.

4 திரு. வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியார் பொக்கிஷதார்.

## தமிழ்நாட்டு
## கா. அபேதவாத மகாநாடு

நவ. 29-ந் தேதி காலையில் சேலத்தில் நடைபெற்ற தமிழ்நாட்டு அபேதவாத மகாநாட்டிற்கு தோழர் தினகரமேதா அக்கிராசனம் வகித்தார். திறப்பாளரான திரு. பாட்லிவாலா வரத்தவறியதால் திருச்சி தோழர் சீனிவாச அம்மாள் மகாநாட்டைத் திறந்துவைத்தார். மாலையில் விஷயாலோசனைக் கமிட்டி கூடிற்று. மறுநாள் மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## தாகூர்—ஆண்ட்ரூஸ் சந்திப்பு

### சிறைவாசிகள் பற்றி சம்பாஷணை

நவம்பர் 28-ந் தேதி ஸி. எப். ஆண்ட்ரூஸ் வங்க சிறைவாசிகள் பிரச்சினையை யொட்டி கவி ரவீந்திரநாத் தாகூருடன் நீண்ட நேரம் சம்பாஷணை செய்தார்.

ஆண்ட்ரூஸ்

தாகூர்

# தமிழர் சீர்திருத்த சங்கம்

## காரைக்குடியில் கிளை ஸ்தாபனம்

திருநெல்வேலி தலைமை ஆபீசாக விருக்கும் தமிழர் சீர்திருத்த சங்கத்தின் கிளை ஒன்று காரைக்குடியில் ஏற்படுத்தும் பொருட்டு 26—11—36 ஞாயிற்றுக்கிழமை இரவு 7 மணிக்கு மகர்நோன்பு பொட்டலில் காதிபந்தர் மானேஜர் தோழர் டி. கே. முத்து செட்டியார் அவர்கள் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சங்கத்தின் நோக்கமாகிய கலப்பு—காதல்—விதவை – சிக்கன மணங்களைப்பற்றியும், விதவா ஆச்சிரமம் ஏற்படுத்த வேண்டிய அவசியத்தைப் பற்றியும், பல அன்பர்கள் சொற்பொழிவாற்றினார்கள். பின் கிளைச் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டு ஆபீஸ் காரைக்குடி செக்காலை ரோட்டு பக்கம் வைப்பதாகவும், அதற்குரிய டைலான் முதலியன தயாரிக்கவும் தீர்மானிக்கப்பட்டு கீழ்கண்ட உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்:—

தலைவர்:—தோழர். என். லெட்சுமிதன் M. A. B. L., (அட்வகேட் தேவகோட்டை).

காரியதரிசி, பொக்கிஷதார்:— தோழர் எஸ். பி. திருநெல்லை ஆச்சி அவர்கள் (கௌரவ மாஜிஸ்திரேட், காரைக்குடி).

உதவி காரியதரிசிகள்—தோழர்களான ஜி. சுப்ரமணியம் (இந்து இளைஞர் சங்கத்தலைவர் தேவகோட்டை) N. S. கணபதி (காரைக்குடி).

கமிட்டி மெம்பர்கள்:—தோழர்களான மு. மரகதவல்லி (மாதர் மறுமண ஆசிரியர்) சி. ம. நடராஜன் (விஸ்வபந்து ஆசிரியர்), டாக்டர் கோவிந்தராஜலு, மெ. சி. மாணிக்கவாசகம், ராம. திருநாவுக்கரசு செட்டியார், S. P. விசாலாட்சி, ப. சௌந்தரம், S. வள்ளிக்கண்ணு, (காரைக்குடி), ராதாகிருஷ்ணன் (தேவகோட்டை), என். ரங்கநாயகி (தேவகோட்டை), பள்ளிக்கொண்டான் (திருப்பத்தூர்),

தலைவர் முடிவுரைக்குப் பின் தலைமை சங்கக் காரியதரிசி தோழர் கே. என். தங்கவேலு இவ்வூரில் ஆண், பெண், இரு பாலர்களும் ஏராளமாக அங்கத்தினர்களாகச் சேர்ந்து சங்கத்தை விருத்தி செய்வதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டு வந்தனோபசாரம் கூறி கூட்டம் இனிது நிறைவேறியது என திரு. கே. என். தங்கவேலு எழுதுகிறார்.

---

### மாகாண சட்டசபை

#### தேர்தலுக்கு அபேக்ஷகர்கள்

சென்னை மாகாண ஷெடியூல்டு வகுப்புக்கட்சி 'அட்ஹாக்' கமிட்டியார் அடுத்து வரும் மாகாண சட்ட சபைத் தேர்தல்களுக்குக் கீழ்க்கண்டவர்களை அபேட்சகர்களாக நிறுத்தி இருக்கிறார்கள். சென்னை (தெற்கு மத்திய நகரத் தொகுதி) திரு. ஜே. சிவஷண்முகம் பிள்ளை, நெல்லூர்:— ராவ் சாகிப். எல். ஸி. குருசாமி கடப்பை:— திரு. கங்காதரசிவா, கர்நூல்:—திரு. எம். எச். ஜகநாதன். சித்தூர்:—ஸ்ரீ. திருமல்லையா, செங்கற்பட்டு:—ராவ் பகதூர் எம். ஸி. ராஜா திருவாரூர்:—ராவ் சாகிப். வி. தர்மலிங்கம் பிள்ளை, ராணிப்பேட்டை:—திரு. பி. எம். பழனிசாமிப் பிள்ளை, திருவண்ணாமலை :—திரு. வி. ஜி. வாசுதேவப்பிள்ளை, திண்டிவனம் :—கே. எஸ். தம்பியப்பன், சிதம்பரம்,—சாமிசகஜானந்தம் திருக்காவலூர் :—ராவ்சாகிப், வி, ஐ. முனுசாமிப்பிள்ளை, தஞ்சாவூர் :—திரு. ஆர். ஷண்முகம், மன்னார்குடி :—திரு. ஆர். டி. மாணிக்கம், அரியலூர் :— திரு. பாலகிருஷ்ண மூப்பனார் மதுரை :—(கொடைக்கானல்) ராவ் சாகிப், என். சிவராஜ். சாத்தூர்:—திரு. பி. பரமேஸ்வரன், கோயில்பட்டி :— திரு. ஆர். பி. பரமசிவம், பொள்ளாச்சி:- திரு. ஆர். டி. கேசவலு, நாமக்கல் :— திரு. ஆர். கிருஷ்ண பண்டாரம்.

---

### சென்னையில் ஜவஹர் நகர்

சென்னை 15, 16, வது டிவிஷனிலுள்ள (எஸ்பிளனேட், பார்க்டவுன்) காங்கிரஸ் வாதிகள் அப்பகுதிக்கு ஜவஹர் நகர் எனப்பெயரிட்டு, ஜவஹர் நகர் காங்கிரஸ் சபை ஒன்றை, ஜில்லா காங்கிரஸ் அனுமதியின் பேரில் ஸ்தாபித்து இருக்கிறார்கள். அதன் திறப்பு விழா வைபவம் நவம்பர் 29-ந் தேதி அன்று நிறைவேறியது.

ஜுபிடர் பிக்சர் சந்திரகாந்தாவில் ஒரு காட்சி.



# ஓட்டர்கட்கு வந்தனம்

## சிவகெங்கை தாலுகா காங்கிரஸ் கமிட்டி

29—11—36-ந் தேதி 3 மணிக்கு சிவகெங்கை ஸ்ரீ நாராயணன் செட்டியார் சத்திரத்தில் தாலுகா காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீயுத. எஸ். ஓ. எஸ். பி. உடையப்பா அவர்கள் தலைமை வகித்தார். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:—

1. நாளது 23—11—36-ந் தேதி நடைபெற்ற இராமனுதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களுக்கு பெருவாரியான தங்கள் வோட்டுகளைக் கொடுத்து வெற்றி பெறச் செய்த வாக்காளர்களுக்கும் மற்றும் எல்லாவிதத்திலும் உதவி புரிந்த பொது ஜனங்களுக்கும் இக்கமிட்டி நன்றியறிதலான வந்தனத்தை தெரிவித்து கொள்ளுகிறது.

2. தூத்துக்குடி தேசபக்தர் உயர் திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் அகாலமரணம் இந் நாட்டிற்கு பெருத்த நஷ்டத்தைக் கொடுத்திருப்பதைக் கருதி வருந்துவதுடன், அன்னாரின் தேச பக்தியையும், தமிழபிமானத்தையும் போற்றி அவர் குமாரருக்கு இக்கமிட்டியின் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்வதெனத் தீர்மானிக்கிறது.

3. திருவாங்கூர் சமஸ்தானத்தில் எல்லாவிடங்களிலும் ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் தடங்கலின்றித் திறந்து விடும்படி அனுமதி கொடுத்த மகாராஜா அவர்களை இக்கமிட்டி மனமார வாழ்த்திப் பாராட்டுகிறது.

4. இதனடியிற்கண்ட 17 அங்கத்தினர்களை வேலூர் மகாநாட்டிற்குப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது. பாக்கியுள்ளவர்களை காரியதரிசி தேர்ந்தெடுக்க அனுமதிக்கிறது.

இத்துடன் கமிட்டி கூட்டம் முடிவெய்தியது. உடனே அவண் குழுமியிருந்தவர்களே ஓர் பொதுக்கூட்டமாக மாஜி தேசபக்தரும், வீரத்தியாகியும் பெரும் புலவருமான ஸ்ரீயுத வ. உ. சி. பிள்ளையவர்களின் மரணத்திற்கு வருந்திப் பலரும் உளங்கசிந்துருகும்படி நாகை குரு குமாரசாமி அவர்கள் சிறிது நேரம் பேசி விட்டு அவ்வமயத்தில் தாமியற்றிய இரங்கற் பாக்களை வாசித்தார். யாவரும் எழுந்து நின்று காலஞ்சென்ற பெரியாரின் ஆன்மா சாந்தியுறப் பிரார்த்தித்து முடிந்தவுடன் கூட்டம் கலைந்தது என காரியதரிசி கா. நா. க. வெ. வேலாயுதம் செட்டியார் அறிவிக்கிறார்.

* * *

### திரு. பி. நா. சொக்கலிங்க செட்டியாரின் நன்றி

அலவாக்கோட்டை, 29-11-36

காளையார் கோவில் சர்க்கிளில் வெற்றிபெற்ற ஸ்ரீமான். பி. நா. சொக்கலிங்கம் செட்டியார் தெரிவிப்பதாவது:—

ராமனுதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் காளையார் கோவில் சர்க்கிளுக்கு காங்கிரஸ் சார்பாக நிறுத்தப் பட்ட என்னை ஆதரித்து காங்கிரஸ் மகாசபையின் கௌரவத்தைக் காப்பாற்றும் பொருட்டு வாக்களித்த ஓட்டர் மஹா ஜனங்களுக்கும் எனது வெற்றிக்காக இரவுபகலாக உழைத்த அபிமானிகளுக்கும் தொண்டர்களுக்கும் எனது மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதோடு பல அயலூர்களிலிருந்தும் விஜயம் செய்து பிரசாரம் செய்த காங்கிரஸ் தலைவருக்கும் எனது மனப்பூர்வமான நன்றியறிதலை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

* * *

### ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாக்ஷியம்மாளின் நன்றி

நவ. 29—

சிவகங்கை சர்க்கிள் பெண்கள் தொகுதியில் வெற்றி பெற்ற ஸ்ரீமதி. பி. நா. சொ. விசாலாக்ஷியம்மாள் தெரிவிப்பதாவது:—

ராமனுதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் சிவகங்கை சர்க்கிளுக்கு காங்கிரஸ் சார்பாக நிறுத்தப்பட்ட என்னை ஆதரித்து காங்கிரஸ் மஹா சபையின் கௌரவத்தைக் காப்பாற்றும் பொருட்டு வாக்களித்த ஓட்டர் மஹா ஜனங்களுக்கும். எனது வெற்றிக்காக இரவு பகலாக உழைத்த அபிமானிகளுக்கும் எனது மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதோடு பல அயலூர்களிலிருந்தும் விஜயம் செய்து பிரசாரம் செய்த காங்கிரஸ் தலைவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

---

### நேரு வீட்டிலுள்ள ஹரிஜன இளைஞன்

#### சட்டசபைக்கு அபேட்சகர்

நேரு குடும்பத்தில் வேலை செய்து கொண்டிருக்கும் ஹரிஜன வாலிபன் ஹிராலால் என்பார் அலகாபாத் பொது தொகுதிக்கு ஒரு அபேட்சகராக காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டால் எடுக்கப்பட்டிருக்கிறாரென்று தெரிகிறது.

---

### ஆவனிப்பட்டி

#### விவேகானந்த கல்விக் கழகம்

இக்கழகத்தின் பத்தாம் ஆண்டு நான்காம் மாதக் கூட்டம் நாளது கார்த்திகைத்திங்கள் பதின் மூன்றும் நாள் (28—11—36) சனிக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு உதவி ஆசிரியர் K. ராமசாமி பிள்ளை அவர்களின் தலைமையில் நடைபெற்றது. மாணவர்கள் கடவுள் வணக்கம் பாடியதும், தலைவர்கள் முகவுரை பகன்றனர். பின்னர் தலைமையாசிரியரவர்களால் மூன்றும் மாதக் கூட்டத்தின் நிகழ்ச்சி வாசிக்கப்பெற்று சபைாரும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

"பொய் சொல்லலாகாது, ஆடையூசி, நாகரீகம், ஆத்திரம் ஆகாது, எல்லாம் தெய்வச்செயல், விளையாட்டே வினை, இனியவைகூறல்" என்னும் பொருள்கள் பற்றி முறையே மாணவர்களான N. முத்தையா, S. P. சீனிவாசன், P. முத்தையா, V. முத்துராமலிங்கம், K. R. M. சுப்பையா, P. மாரிமுத்து, A. L. சுப்பையா முதலியோர்கள் நன்கு பேசினார்கள்.

தலைவர்கள் தக்க முடிப்புரை நவின்றதின் பிறகு, ஆசிரியரவர்களால் வந்தனம் கூறப்பெற்று, சந்தனம், கற்கண்டு, தாம்பூலம் வழங்க, கூட்டம் மாலை 4–30 மணிக்கு இனிது நிறைவெய்தியது.

# மல்லுக்கு நிற்கும் வல்லரசு

## படை பலமும் பணச் செலவும்

### ரஷியா ஜெர்மனி பிரஞ்சு, பலம்

இப்போது உலகில் பல நாடுகள் எவ்வளவு யுத்த பலம் சேகரித்திருக்கின்றன வென்பதை பற்றி சுமாராக பின் வரும் தகவல்களால் தெரிய வருகின்றன.

*ஜெர்மனி:*—சென்ற வருஷம் 700,000,000 பவுன் செலவிட்டது இவ்வருஷம் 900,000,000 பவுன். இவ்வருஷ முடிவில் ஜெர்மனி எந்த நிமிஷத்திலும் 5,50,000 சோல்ஜர்களை போர்முனைக்கு அனுப்பமுடியும். அவர்களுக்குத் துணையாக 3000 டாங்கிகள் 7000 விமானங்கள்: விமானப் பயிற்சி பெற்றவர் 20,000.

*ரஷியா:*—சென்ற வருஷச் செலவு 650,000,000 பவுன். இவ்வருஷம் 1480,000,000. பயிற்சி பெற்ற நிரந்தர சைனியத்தில் 1,300,000 சோல்ஜர், ரிசர்வ் படையில் 2,000,000 பேர். 6000 டாங்கிகள். வருஷ ஆரம்பத்திலிருந்த விமானங்கள் 8000. வருஷ முடிவில் சுமார் 14,000 விமானங்கள்!

*பிரான்ஸ்:*-சென்ற வருஷச் செலவை விட இவ்வருஷம் 60,000,00 பவுன் தான் அதிகம். இவ்வருஷச் செலவு 300,000,000 பவுன் என்று தெரிகிறது பூர்ணமாக பயிற்சி பெற்ற சோல்ஜர்கள் 600,000 தான். விமானங்கள் 4000. ஆகவே ஒப்பிட்டுப் பார்க்கும் போது பிரான்சின் பலம் தான் சற்றுக் குறைவாக இருக்கிறது.

### ரஷியாவின் கடற் படை

ஜர்மனி 3 யுத்த கப்பல்களைக் கட்டுகிறது. 15 க்ரூயஸர்களும் தயாராகின்றன. விமான மேற்றும் கப்பல்களும், கப்பல் நாசக லைகளும், நீர் மூழ்கிகளும் நூற்றுக் கணக்கில் அங்கு தயாராகின்றன.

"1933-ம் வருடத்திற்குப் பின் ருஷிய கடற்படை பின் வருமாறு அதிகரிக்கப் பட்டிருக்கிறது. நீர் மூழ்கிகள் முன்னிருந்ததைவிட 7 மடங்கு அதிகரிக்கப்பட்டிருக்கின்றன. யுத்தக் கப்பல்கள் 3 மடங்கும், கரையோர பீரங்கிகள் $1\frac{3}{4}$ மடங்கும் பீரங்கிகள் 2 மடங்கும், கடல்விமானப் படை 5 மடங்கும் அதிகமாயிருக்கின்றன. பஸிபிக் சமுத்திரத்திலும் பால்டிக் கடலிலுமுள்ள எங்கள் சப்மரைன்கள் (நீர் மூழ்கிகள்) மற்றெந்த நாட்டு சப்மரைன்களையும்விட வெகுநேரம் நீர்மட்டத்திற்குக் கீழே தங்கும் சக்தியுடையன. எங்கள் கடற்படை தயாராயிருக்கிறது" என்று ருஷிய கடற்படைத் தலைவர் தெரிவிக்கிறார்.

### 1050 கோடி பிராங்க்

1937-ல் பிரெஞ்சு சர்க்கார் ஆயுத விஸ்தரிப்புக்காக 1050 கோடி பிராங்க் செலழிப்பார்கள். இதுவரை இவ்வளவு பெரிய தொகை இதற்காக செலவழிக்கப்படவில்லை. (1 பவுன் 105 பிராங்க்)

### ஜப்பானின் ராணுவ பட்ஜெட்

ஜப்பானின் புது வருஷ பட்ஜெட்டில் 177,000,000 பவுன் செலவாகும். இதில் 40,000,000 பவுன், ஜப்பானின் ராணுவம் கடற்படை முதலியவற்றை திறம்பட அமைப்பதற்கென்று ஒதுக்கப்படுகிறது.

வரிச் சீர்திருத்தத்தில் 14,000,000 பவுனும், கல்வி சீர்திருத்தத்தில் 8,000,000 பவுனும் செலவிடப்படும்.

### ஜெர்மானியருக்கு கல்தா

தற்போது ருஷிய சர்க்கார் தமது தேசத்திலுள்ள ஜர்மனியர் தொகையைக் கணக் கெடுத்து வருகிறார்கள் அங்கேயுள்ளோர் ஒவ்வொருவரும் தமது அரசியல் கொள்கை என்னவென்பதைத் தெரிவித்து விடவேண்டும். ஜெர்மானியர் பலரை வெளியே அனுப்பும் நோக்கத்துடனேயே இம்முயற்சி நடைபெறுகிறதென்று ஓர் (போலண்டு) வார்ஸாவிலுள்ள ஓர் ஜெர்மன் செய்தி உறுதி சொல்கிறது.

### 'எங்களுக்கு ஜெர்மனி போதாது'

காஸ்லார் என்ற இடத்தில் கூடிய தேசீய விவசாயிகள் காங்கிரஸில் ஜெனரல் கோயரிங் பேசுகையில் பின் வருமாறு தெரிவித்தார்:—

ஜெர்மனி 1944-ம் ஆண்டில் யுத்தத்தில் ஈடுபட்ட பொழுது இருந்தது போல் இப்பொழுது அவ்வளவு பலவீனமாகவில்லை. அப்பொழுது ஜெர்மனியில் ஒரு பயங்கொள்ளி பார்லிமெண்டு இருந்து வந்தது. ஆனால் இப்பொழுதோ ஆண்மை வாய்ந்த வீரர்கள் இந்நாட்டை ஆண்டு வருகின்றனர்.

தற்பொழுது ஜெர்மானியர் வசிக்கும் பிரதேசம் 660 லக்ஷம் ஜனங்கள் வசிக்கப் போதுமானதல்ல. நமது ஜனத்தொகை 900லக்ஷமாகப் பெருக்க வேண்டுமென நாம் விரும்புகிறோம். அப்பொழுது நமக்கு இந்தப் பிரதேசம் சிறிதும் போதுமானதாயிராது.

ஜெர்மன் விவசாயிகள் மீண்டும் யுத்தம் செய்ய அவசியமேற்படுமாயின், அவர்கள் கலப்பை பிடிக்கும் கையில் கத்தியேந்தி உறுதியுடன் போர் புரிவரென்பதுபற்றி எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

---

### கம்மப்பட்டி கொலைவழக்கு எதிரிக்கு விடுதலை

ராமனாதபுரம் ஜில்லா கம்மப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த வன்னியக்கோன் என்பவன் 22—4—36, அன்று சின்னத்தம்பிக் கோன் என்பவருடைய வீட்டிற்கு எதிரே விடப்பட்டிருந்த வண்டியொன்றில் மாடுகளைக் கட்டினார் என்றும், இதற்கு சின்னத்தம்பி கோன் ஆக்ஷேபித்து வசைச்சொற்களைப் பிரயோகிக்க, வன்னியக்கோன் கோபங்கொண்டு அவரை வண்டி முளையால் குத்தினாரென்றும் இதனாலுண்டான காயத்தால் சின்னத்தம்பிக் கோன் மரண மடைந்தாரென்றும் வழக்கு கொண்டு வரப்பட்டது. ராமனாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜ் வன்னியக் கோனுக்கு ஆயுட்பரியந்தம் தீவாந்திர சிக்ஷையளித்தார். அப்பீலில் ஜஸ்டிஸ் பாண்டுரங்கராவ் பிராஸிக்யூஷன் தரப்பார் வழக்கை சரிவர ருஜுப்பிக்கவில்லையென்று எதிரியை விடுதலை செய்துவிட்டார்.



### ஸ்தாபகர் வருகை

கார்திக் சந்திரபோஸ் என்பவர் கல்கத்தாவில் பேர்போன டாக்டர் போஸ் ஆராய்ச்சிச் சாலையின் ஸ்தாபகர். அவர் சென்ற வாரம் சென்னைக்கு வந்தார். சென்டிரல் ஸ்டேஷனில் பெரிய வரவேற்பு நடைபெற்றது. நடுவில் நிற்பவர் திரு. போஸ் என்பது விளக்கப்பட வேண்டுவதில்லை யன்றோ?

P. P. B.



### எப்படி யிருக்கும்?

வெளிநாட்டு பிரஞ்சு காலனிகளின் பரிசோதகராகிய ஸ்ரீ. ஜஸ்டின் கோடார்ட் காரைக்காலின் சமீபம் திருநள்ளாற்றைப் பார்வையிட்டபோது பிரமாதமான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. அதன் போது படத்தில் காணும் அழகிகள் நடனம் புரிந்தார்கள். அது ஸ்ரீ கோடார்ட்டுக்கு எப்படி யிருந்ததோ? அவரது தேசம், பிரான்ஸ் அழகிகட்குப் பேர்போனது; நடனத்திலும் சிறந்தது.

—P.P.B.



**வளரும் பெண்கள்**

அகில இந்தியப் பெண்கள் மகாநாட்டின் சென்னைத் தொகுதி மகாநாடு ஸ்ரீமதி B. ராமாவின் தலைமையில் நவம்பர் 28-ந்தேதி சேத்துப் பட்டு சேவா சதன் கட்டிடத்தில் நடைபெற்றது. அங்கு விஜயம் செய்திருந்த பெண்மணிகளில் சிலர் காணப்படுகின்றனர்.

—P. F. E.



**கோ பூசை?**

பம்பாயில் நடைபெற்ற ஒரு கோ பூசை—பசு வணக்கம். அதனை மதுராதாஸ் வாசன்ஜி என்பாரும் இதர ஹிந்து தலைவர்களும் பிரசன்னமாகி நடத்தினர்கள். இவர்கள் மிருகமாகிய பசுவை வணங்குவதைப் போல, அவதிப்படும் மனிதப் பசுக்களை கண் பார்க்கவாவது செய்வார்களா?

—C. B.



காரைக்குடி (ஜில்லாவில்), ராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு காங்கிரஸ் சார்பில் அபேக்ஷகர்களாக நின்று வெற்றி பெற்றவர்கள்—



திரு. கார்மேகத் தேவர்
(திருவாடானைத் தொகுதி)



திரு. பி. நா. சொக்கலிங்கம் செட்டியார்
(காளையார் கோவில் தொகுதி)



ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாக்ஷி அம்மாள்
(சிவகங்கை ஸ்திரீ தொகுதி)

புத்த கயா

இந்தப் படம் கயாவுக்குப் பக்கத்தில் 8-வது மைலில் உள்ள புத்த கயா பூர்வீகக் கட்டிடம். மிக அழகானது.

—S. மெய்யப்பா.

ஓர் ஆண்டு விழா

பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்க இரண்டாவதாண்டு நிறைவு விழா 7-11-36ந் தேதி நடைபெற்றது. பிரசங்கம் புரிந்தவர்களும் இதர அன்பர்களும் காணப்படுகிறார்கள்.

Photo by P. K. Swamy.



# இராமநாதபுரம் ஜில்லா போர்டு தேர்தல்

ராமநாதபுரம் ஜில்லா போர்டில் மொத்தம் 52 ஸ்தானங்கள். இவற்றுள் ரிஸர்வ் ஸ்தானங்கள் 10. இதுவரையிலும் 46 ஸ்தானங்களுக்குத் தேர்தல் முடிவு கிடைத்திருக்கிறது. மேற்சொன்ன 46 ஸ்தானங்களில் காங்கிரஸ் அபேக்ஷகர்கள் 30 ஸ்தானங்களைக் கைப்பற்றி யிருக்கின்றனர்.

பள்ளத்தூர் சர்க்கிளில் பெரிய கோட்டையில் தேர்தல் நடக்கவேண்டியிருக்கிறது. திருப்புல்லாணி, மண்டபம், தேவிப்பட்டணம், ராமநாதபுரம் ஆகிய 4 ஸர்க்கிளிலும், பாலட் பேப்பர் குறித்த நாளில் வந்து சேராததால் 10-ந் தேதி தேர்தல் நடைபெறும்.

காரைக்குடி ஜில்லாவில் வெற்றிபெற்றோர் விவரம்:—

### காளையார் கோவில் சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. பி. நா. சொக்கலிங்கஞ் செட்டியார் (கா) | 1593 |
| திரு. உ. அ. அரு. அருணாசலம் செட்டியார் | 1422 |
| செல்லுபடியாகாதவை | 51 |

### மதகுபட்டி சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. சி. உ. சுப. உடையப்பா (கா) | 1764 |
| திரு. கூ. அரு. க. சுப்பிரமணியன் செட்டியார் | 1302 |
| செல்லுபடியாகாதவை | 47 |

### திருப்பத்தூர் சர்க்கிள்

| | |
|---|---|
| டாக்டர் சுப்பிரமணியம் (கா) | 2120 |
| திரு. வயி. ராம. வயிரவன் செட்டியார் | 1274 |
| திரு. ச. பி. ந. மு. முகமது இப்ராஹிம் ராவுத்தர் (கா) | 2029 |
| திரு. பிரான்மலை ராவுத்தர் | 1304 |
| திரு. அள. வீர. வீரப்ப செட்டியார் | 18 |
| திரு. எஸ். எம். எஸ். தாவுத் பாட்சா | 19 |
| செல்லுபடியாகாதவை | 54 |

### நெற்குப்பை சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. S. RM M. முத்தையா செட்டியார் | 1111 |
| திரு. வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியார் (கா) | 1080 |
| செல்லுபடியாகாதவை | 27 |

### சதுர் வேதமங்கலம் சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. கரு. முத்து. சிவலிங்கம் செட்டியார் (கா) | 1505 |
| திரு. அரு. வீர. வீரப்ப செட்டியார் | 1085 |
| திரு. சி. ராம. மு. முத்தையா செட்டியார் | 12 |
| செல்லுபடியாகாதவை | 59 |

### கல்லல் சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. ஆரு. மு. பழனியப்ப. செட்டியார் | 947 |
| திரு. ஆர். வி. சாமிநாதன் (கா) | 868 |
| செல்லுபடியாகாதவை | 36 |

### குன்றக்குடி சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. மு. ராம. சொ. பெரியணன் செட்டியார் | 1068 |
| திரு.சு. கந்தசாமி பிள்ளை (கா) | 1022 |
| செல்லுபடியாகாதவை | 36 |

### திருவாடானை சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. கார்மேகத் தேவர் (கா) | 1422 |
| திரு. அள. அரு. சோமநாதன் செட்டியார் | 1092 |

### தேவகோட்டை சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. உ. ராம. உ. மு. சுப. லட்சுமணன் செட்டியார் | 2620 |
| திரு. ராம. அருணாசலம் (கா) | 2050 |
| செல்லுபடியாகாதவை | 94 |

### தொண்டி சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. காளைராஜ செட்டியார் (தேவக்கோட்டை ஜமீந்தார்) | 2120 |
| திரு. முத்தையா செட்டியார் (கா) | 352 |
| செல்லுபடியாகாதவை | 106 |

### சிவகங்கை சர்க்கிள்

| | |
|---|---|
| சிவகங்கை ராஜா | 4754 |
| திரு. வேலாயுதம் செட்டியார் (கா) | 923 |
| (பெண்கள் தொகுதி) | |
| ஸ்ரீமதி பி.நா. சொ. விசாலாட்சி அம்மாள் (கா) | 4159 |
| ஸ்ரீமதி கிருஷ்ணம்மாள் | 1300 |

இன்னும் மற்ற இடங்களில் வெற்றி பெற்றவர்கள்:—

### திருப்புவனம் சர்க்கிள்

திரு. சுப. க. அ. இராமநாதன் செட்டியார்

### மானமதுரை சர்க்கிள்

திரு. எஸ். சேஷாத்திரி ஐயங்கார் (கா)

### ராஜபாளையம்

| | |
|---|---|
| திரு. என். குமாரசாமி ராஜா (கா) | 4452 |
| திரு. எ. கிருஷ்ணன் (ஆதிதிராவிடர்) (கா) | 4358 |

### முதுகுளத்தூர் சர்க்கிள்

திரு. முத்துராமலிங்க தேவர் (கா)

### பரமக்குடி சர்க்கிள்

திரு. வீராசாமி ஆச்சாரி (கா)

### சிவகாசி சர்க்கிள்

| | |
|---|---|
| திரு. எஸ். ராமசாமி நாயுடு (கா) | 1390 |

### சாத்தூர் சர்க்கிள்

திரு. பாபு நாயுடு (கா)
திரு. கந்தன் (ஹரிஜன்) (கா)
(சாத்தூர் தாலூக்காவில் 6 ஸ்தானங்களை காங்கிரஸ் கைப்பற்றியது)

### மண்டபசாலை சர்க்கிள்

திரு. ஜெயராம் செட்டியார் (கா)

### திருச்சுளி சர்க்கிள்

திரு. ரங்கசாமி ரெட்டியார் (கா)

இங்கு மற்றிருவர் நின்று, ஆளுக்கு இரண்டு ஓட்டுப்பெற்று ஜாமீன் தொகையு மிழந்தனர்.

### கரியப்பட்டி நரிக்குடி சர்க்கிள்

திரு. கோட்டசாமி தேவர் (கா)
திரு. ராமசாமி தேவர் (கா)

### சிக்கல்

திரு. முருகையப்ப பிள்ளை

### சாயல்குடி

திரு. நவநீதகிருஷ்ண சேர்வை (கா)
திரு. பெருமாள் குடும்பன் (ஹரிஜன் காங்)

### வாட்ராப் சர்க்கிள்

திரு. அழகிரிசாமி நாயுடு (கா)

### சாத்தூர் தாலூக்கா

திரு. ராமசாமி நாய்க்கர் (கா)

### நத்தம்பள்ளி சர்க்கிள்

திரு. கருப்பண்ணத் தேவர் (கா)

### அருப்புக்கோட்டை

டவுன் தொகுதி:-பாளையம்பட்டி ஜமீந்தார் ஸ்ரீமான் தசரத
திரு. குமாராண்டி (ஹரிஜன்) (கா)

### எதிர்கோட்டை சர்க்கிள்

திரு கோபால நாயக்கர் (கா)

### ஸ்ரீ வல்லிப்புத்தூர் சர்க்கிள்

திரு. பாலய்யா பிள்ளை (கா)

(பெரிய எழுத்திலிருக்கும் பெயர்கள் வெற்றி பெற்றவை.)

## கிட்டா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்

### நான்காவது வருட நான்காவது நிர்வாக சபைக் கூட்டத்தின் நிகழ்ச்சி

தாது வருடம் கார்த்திகை மாதம் 1-ம் தேதி 16-11-36 திங்கட்கிழமை இரவு 8 மணிக்கு ஷை கூட்டம் சங்கக் கட்டிடத்தில் ஆரம்பிக்கப் பெற்றது. தலைவர் திரு. உ. தெ. உ. சாமிநாதன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள்.

நான்காவது வருட மூன்றாவது நிர்வாக சபைக்கூட்ட நடவடிக்கைகள் வாசித்துக் காண்பிக்கப் பெற்றன.

16-9-36-லிருந்து 16-11-36 வரையிலுள்ள வரவு செலவு கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப் பெற்று ஒப்புக் கொள்ளப் பெற்றன.

வெளியூர்களிலிருந்து வந்த கடிதங்கள் நிர்வாக நடவடிக்கைகள் வாசித்துக் காண்பிக்கப் பெற்றன.

கோட்டா ஸ்டார் சானிட்டரி போர்டால் உயர்த்த உத்தேசித்திருக்கும் வீட்டு வரியை ஆட்சேபித்து சங்க மூலம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென சில அலோர் ஸ்டார் அங்கத்தினர்களால் எழுதப்பெற்ற கடிதம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று, அதுபோல் ஸ்டேட் கவுன்சிலுக்கும், ஷை சானிட்டரி போர்டுக்கும் லாயர் மூலம் கடித மெழுதுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

மேல் கண்ட விஷயமாய் நமது அயலூர் அங்கத்தினர்களுக்கு ஆங்காங்குள்ள சானிட்டரி போர்டிலிருந்து ஏதாவது நோட்டீஸ் கிடைத்திருக்கிறதாவென தெரிந்துகொள்ள கடிதங்கள் எழுதுவதென தீர்மானிக்கப்பெற்றது.

மலேயா மத்திய இந்திய சங்கத்தில் அதற்குரிய சந்தாவைச் செலுத்தி நம் சங்கமும் அங்கத்தினராகச் சேர்ந்து கொண்டு நமது பிரதிநிதியாக திரு. வீ. அ. அருணாசலம் செட்டியாரவர்களை அனுப்பி வைப்பதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

இந்தியாவிலிருந்து வரவிருக்கும் தாது கோஷ்டி கிட்டாவிற்கு விஜயம் செய்யுங்கால், தம் சங்கச் சார்பில் வரவேற்று உபசரிப்பதென்றும்; அதற்கு வரவேற்பு, மகஜர் விஷயமாய் கீழ்க்கண்ட அங்கத்தினர்களை சப் கமிட்டியாக தேர்ந்தெடுக்கப்பெற்றது.

க. அழ. ராம. சுப்பிரமணியன் செட்டியார்

சா. ராம. சிதம்பரம் செட்டியார்

ஆரு. பழ. சி. பழ. சாமிநாதன் செட்டியார்

வீ. அ. அருணாசலம் செட்டியார்

சொ. சித. சிதம்பரம் செட்டியார்

உ. ராம. மெ. செ. சு. வினைதீர்த்தான் செட்டியார்

க. மு. மு. சுப்பிரமணியன் செட்டியார்

கூலிம், ராம. சுப. ராம. சுடை ராஜினுமா விஷயமாய் அவர்களைக் கண்டு எப்பொழுதும் அங்கத்தினராயிருந்து வரவேண்டுமென கேட்டுக் கொள்வதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

கனம் குமார ராஜா மு. அ. முத்தையா செட்டியாரவர்கள் சென்னை மாகாண கல்வி மந்திரியாக நியமிக்கப் பற்றிருப்பதைப் பற்றி மகிழ்வதாக, சென்னை சர்க்காருக்கும், கனம் ராஜா சர். மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்களுக்கும் குமார ராஜாவிற்கும் பாராட்டுக் கடிதங்கள் எழுதுவதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

---

## கருப்பாயி கொலை வழக்கு

### எதிரிக்கு விடுதலை

---

ராமநாதபுரம் ஜில்லா கீழ்குடி கிராமத்தைச் சேர்ந்த கருப்பாயி சென்ற வருஷம் டிசம்பர் 25-ந் தேதியன்று வயலில் கொலை செய்யப்பட்டு கிடந்தாள். இது சம்பந்தமாக போலீஸார் கருப்பைய நாடார் என்பவரைக்கைது செய்தார்கள். ராமநாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜ் வழக்கை விசாரித்து எதிரிக்கு மரண தண்டனை விதித்தார். இவ்விஷயம் சென்னை ஹைகோர்டில் நவம்பர் 30-ந் தேதி விசாரணைக்கு வந்தபொழுது ஜஸ்டிஸ் மாக்கெட்டும், ஜஸ்டிஸ் லக்ஷ்மணராவும் எதிரியை விடுதலை செய்து விட்டனர்.

## 'என் கடன் பணிசெய்து கிடப்பதே!'

---

"நான் ஓர் பிரசங்கி அல்ல. எழுதுந் தொழிலில் ஈடுபட்டவனும் அன்று. தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களால் எழுதவேண்டுவன எல்லாம் என்னாலேயே எழுதப்பட்டு விட்டன. ஒரு காலத்தில் எனது நண்பர்கள் என்னை ஓர் வைரம் எனவும் அழைத்ததுண்டு. நீதிமன்றம் ஏறுவதற்குக் குரிய காலம் வந்தது. அப்போதும் மிகுந்த வருத்தத்துடனேயே எனது உதடுகள் அசைந்தன. இன்று எனது தேசத்தில் ஊமைகளாய் வாழும் லட்சக்கணக்கான மக்களுக்கிடையே சென்று அவர்களிடம் எப்படி வாழ்வதென்று அறிவுறுத்துவதே எனது கடமையாகக் கொண்டுள்ளேன்.

சுயராஜ்யத் திறவுகோல் நகரங்களில் இல்லை. கிராம உழைப்பிலேயே அது அமைந்திருக்கின்றது என்பதை உணர்ந்தே நான் ஓர் கிராமத்தில் வசித்து வருகிறேன்—இக்கிராமம் நான் தேடி அடைந்த ஒன்று அன்று. என்னை நாடி வந்ததே அஃது."

—காந்திஜீ.

---

## ஊழியன் சந்தா

| | | |
|---|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | ரூ. | 6—0—0 |
| ,, ஆறு மாதங்கட்கு | ,, | 3—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ,, | 10—0—0 |
| ஆறு மாதங்கட்கு | ,, | 5—0—0 |

காரியஸ்தர்,
"ஊழியன்" ஆபீஸ்
56, தம்புசெட்டித் தெருவு,
சென்னை.



## கடன் பத்திரங்களும் பங்குகளும்

---

### (ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

சென்னை, டிசம். 2.

| சர்க்கார் கடன் பத்திரங்கள் :— | | வாங்கும் விலை | விற்கும் விலை |
|---|---|---|---|
| | | ரூ. அ. | ரூ. அ. |
| 2¾ ,, புதிய கடன் 1948-52 | (வரியுள்ளது) | 101—2 | 101—4 |
| 3 % 1941 | (வரியுள்ளது) | 105—1 | 105—3 |
| 3 ,, 1951-54 | ,, | 103-12 | 103-14 |
| 3 ,, ஜி. பி. நோட்ஸ் | ,, | 89-10 | 89-14 |
| 3½ ,, ,, | ,, | 100—0 | 100—3 |
| 3½ ,, 1947-50 | ,, | 107—8 | 107-10 |
| 4 ,, 1943 | ,, | 111-15 | 112—1 |
| 4 ,, 1960-70 | ,, | 115—5 | 115—7 |
| 4½ ,, 1955-60 | ,, | 120—9 | 120-11 |
| 5 ,, 1939-44 | ,, | 109—1 | 109—3 |
| 5 ,, 1940-43 | ,, | 111-14 | 112—0 |
| 5 ,, 1945-55 | (வரியில்லாதது) | 121—7 | 121—9 |
| 5½ ,, 1938-40 | (வரியுள்ளது) | 107—9 | 107-11 |
| 3 ,, 1956-61 மைசூர் | (வரியில்லாதது) | 102—0 | 102—4 |
| 3½ ,, 1951-58 ,, | ,, | 107—1 | 107—5 |
| 4 ,, 1953-63 ,, | ,, | 113-10 | 113-14 |
| 5 ,, 1955 ,, | ,, | 126—4 | 126-12 |
| 5½ ,, 1938 ,, | ,, | 107—6 | 107-10 |
| 6¼ ,, 1940 ,, | ,, | 114—0 | 114—4 |
| 6½ ,, 1941—51 ,, | ,, | 120—0 | 120—8 |
| 3½ ,, 1956-61 கொச்சி | ,, | 77—0 | 77—6 |
| 5 ,, 1943-53 கொச்சின் | | 111—8 | 112—0 |
| 3½ ,, 1956 திருவாங்கூர் | | 103—0 | 103—4 |

---

| பாங்கி:— | | | ரூ. |
|---|---|---|---|
| ரிஸர்வ் | பாங்க் | | 138/8 |
| இம்பீரியல் | ,, | f. p. | 1565 |
| ,, | ,, | p. p. | 390 |
| இந்தியன் | பாங்க் | பெரியது | 141/8 |
| ,, | ,, | சிறியது | 30½ |
| ஸென்டிரல் | ,, | | 35/12 |
| வெள்ளி:—(பம்பாய்) ரெடி | | | 52-10 |
| தங்கம்:—(பம்பாய்) ரெடி | | | 35-2-6 |
| ப்ரோச்த பஞ்சு—(பம்பாய்) ஏப்ரல்—மே. | | | 219 |

---

## ரயில் போக்கு வரவு

---

### மதராஸ்-எழும்பூர்

#### மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | சேரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 30 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 7 30 | மாலை 6 55 |
| கடலூர் பாஸஞ்சர் .... | மாலை 3 55 | காலை 10 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 5 50 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 25 | காலை 5 10 |

#### கார்டு லைன்.

| | | |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாஸஞ்சர் .... | காலை 11 35 | மாலை 2 25 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 8 0 | காலை 7 10 |

### மதராஸ்—சென்ட்ரல்

| | | |
|---|---|---|
| கல்கத்தா மெயில் | மாலை 8 15 | காலை 8 5 |
| க்ராண்டு ட்ரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 7 45 | மாலை 5 15 |
| பம்பாய் மெயில் .... | காலை 8 55 | காலை 5 5 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | காலை 4 5 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 10 |
| ,, எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 1 55 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 20 | மாலை 7 35 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 6 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 30 | மாலை 1 40 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 6 30 | — |
| காட்பாடி பாஸஞ்சர்.... | 5 30 | 9 40 |
| மைசூர் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | காலை 7 20 |
| புது டெல்லி எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |

---

# விலைவாசிகள்

## வட்டி விகிதம்

ரேங்கூன் நடப்பு வட்டி

| | | |
|---|---|---|
| தாது சித்திரைமீ | வட்டி ரூ. | 0—4—6 |
| „ வைகாசிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| „ ஆனிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| „ ஆடிமீ | வட்டி ரூ. | 0—4—0 |
| „ ஆவணி | வட்டி ரூ. | 0—4—0 |
| „ புரட்டாசி | வட்டி ரூ. | 0—4—0 |
| „ ஐப்பசி | வட்டி ரூ. | 0—4—0 |

மதராஸ் நடப்பு வட்டி

| | | |
|---|---|---|
| தாது சித்திரைமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| „ வைகாசிமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| „ ஆனிமீ | வட்டி ரூ. | 0—7—0 |
| „ ஆடிமீ | வட்டி ரூ. | 0—6—9 |
| „ ஆவணி | வட்டி ரூ. | 0—6—0 |
| „ புரட்டாசி | வட்டி ரூ. | 0—6—0 |
| „ ஐப்பசி | வட்டி ரூ. | 0—5—3 |

ரங்கூன்

தாது ஆடி தவணை வட்டி 0—3—6

கொழும்பு நடப்பு வட்டி

1936 ஜுன் 0—5—9

செய்கோன்

தாது ஐப்பசி நடப்பு வட்டி 0—4—0
„ தவணை வட்டி 0—4—0

31-10-36-ல் நெல் விலை பிக்கல் 1-க்கு 2$82-லிருந்து 2$86 வரை.

31-10-36-ல் அரிசி விலை பிக்கல் 1-க்கு 3$76-லிருந்து 3$78 வரை.

31-10-36-ல் குருணை விலை பிக்கில் 1-க்கு 3$49-லிருந்து 3$51 வரை.

பினாங்கு

தாது ஐப். நடப்பு வட்டி 0—4—0
„ „ தவணை வட்டி 1உ 0—3—6
„ „ தவணை „ 16உ 0—3—6

சிங்கப்பூர்

தாது ஐப். நடப்பு வட்டி 0—4—0
„ „ 16உ தவணை „ 0—3—6
„ கார்த் 1உ „ 0—3—6

## ரப்பர்

லண்டன், டிசம். 1உ

லண்டன் ஷீட் ரப்பர் வாங்குவோர் விலை பவுன் 1-க்கு 8 13/16 பென்ஸ்
விற்பவர் விலை 8 7/8 பென்ஸ்

## தங்கம், வெள்ளி

சென்னை, டிச். 2உ

| | |
|---|---|
| சவரன் (சில்லரை) | 22—5—3 |
| „ மொத்தமாக | 22—5—0 |
| ஆலைத்தங்கம் தோலா 1-க்கு | 34-15-6 |
| மூனா தங்கம் „ | 34-9—6 |
| வெள்ளி மொத்த விலை | |
| 100 ரூபா எடைக்கு | 52-10-0 |
| 1 ரூபா எடைக்கு | 0—8—9 |

ரிசர்வ் பாங்க் வட்டி:—3 பெர்சென்டு.
இங்கிலாந்து பாங்க் வட்டி:—2 பெர்சென்டு

## உண்டியல் விலை

| | |
|---|---|
| ஸ்டெர்லிங் விற்பனை | 157 |
| 30 நாள் தவணை வாங்குவது | 152 |

சிங்கப்பூர், நவம். 18.

| | |
|---|---|
| ரப்பர் சாத்தல் | 31¼ செண்டு |
| சயம் பிக்கல் | 113·37½ வெள்ளி |
| சவரன் | 14.45 „ |
| வெள்ளி கட்டி | 21 1/16 „ |
| கொப்பரா (உலர்ந்தது) | 7·10 „ |
| „ (கலவை) | 6·60 „ |

## கப்பல்

சென்னையிலிருந்து ரங்கூன்

எதோபியா:—டிசம்பர் 4ம் தேதி புறப்படும்.

எரின்புரா:—டிசம்பர் 7-ம் தேதி வந்து 11-ம் தேதி போகும்.

எதோபியா:—டிசம். 14-ம் தேதி வந்து 18-ம் தேதி போகும்.

மலாயா

ரோனு:—டிசம்பர் 12-ம் தேதி வந்து 15-ம் தேதி புறப்படும்.

ரஜுலா:—டிசம். 26ம் தேதி வந்து 29-ம் தேதி புறப்படும்.

### பி. அண்டு ஓ. மெயில்கள்

கொழும்பிலிருந்து மலாய் நாட்டுக்கு புறப்படும் கப்பல்களும் தேதிகளும்:—

| | |
|---|---|
| ரான்புரா | 13—12—36 |
| ராவல்பிண்டி | 27—12—36 |

நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்கு

| | |
|---|---|
| ரஜுலா | 5—12—36 |
| ரோனு | 19—12—36 |

மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு

| | |
|---|---|
| ரோனு | 10—12—36 |
| ரஜுலா | 24—12—36 |



## காலஞ்சென்ற தேச பக்தருக்கு

தனவைசிய இளைஞர் சங்கத்தார் அனுதாபம்

கொழும்பில் நவம்பர் 22-ம் தேதி பிற்பகல் 3 மணிக்கு ஷை சங்கத்தின் பொதுக்கூட்டமொன்று திரு. எம். ஆர். சேதுராமனவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழன்னையின் தவப் புதல்வரும், ஒப்பில்லாத் தேசியத் தலைவருமான தேசபக்தர் திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் காலஞ் சென்றது குறித்து, சங்கத் தலைவர் ஸ்ரீமான் ஆர். எம். எஸ். எம். கதிரேசனவர்களால கீழ்க்கண்டவாறு ஓர் அனுதாபத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு, ஏகமனதாகத் தங்கள் அனுதாபத்தை தெரிவித்துக் கொள்வதாக நிறைவேற்றப்பட்டது:—

"தென்னாட்டுத் திலகமெனப் போற்றத்தக்க சிரிய தேச பக்தரும், தமிழ் நாட்டினரிடையே தேசிய சுதந்திர உணர்ச்சியை எழுப்பி வீரத்தியாகம் செய்த அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண் சிங்கமும், தன்னலம் விடுத்துப் பிறர் நலம் கருதும் தியாக உருவாய் வந்த உத்தமத் தமிழரும், உயரிய தமிழ்ப் புலவருமான வீர வாழ்வு வாழ்ந்த வீரத்தியாகி ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் காலஞ் சென்ற செய்தி கேட்டு இச் சங்கத்தினர் தங்களின் ஆழ்ந்த அனுதாபத்தை வருந்தித் தெரிவிப்பதோடு ஸ்ரீமான் பிள்ளையவர்களின் ஆத்மா சாந்திபெற இறைவனைப் பிரார்த்தித்து இத் தீர்மானத்தை திரு. சிதம்பரம் பிள்ளையவர்களின் குடும்பத்தாருக்குத் தெரிவித்துக் கொள்வதென இக்கூட்டம் தீர்மானிக்கிறது"

மேற்குறித்த அனுதாபத் தீர்மானத்தை ஸ்ரீமான் கதிரேசனவர்கள் கொண்டு வரும்போது திரு. சிதம்பரம் பிள்ளையவர்களின் சுதந்திர உணர்ச்சியின் மாண்பையும், அவர் தேசத்திற்கு செய்த தியாகச் செயல்களின் தன்மையையும், பாரதத் அன்னை ஓர் சிறந்த தேசபக்தரை இழந்து பரிதவிக்க நேரிட்ட நிலை குறித்தும், தன்னலம் விடுத்த அப்பெருந் தமிழ்ப் புலவர் நாட்டுக்குழைத்து இன்னல் பல அனுபவித்து இறுதிவரை வீர வாழ்வு வாழ்ந்து நம்மிடையேயிருந்து பிரிந்து விட்டது தமிழ் மக்களின் தவக் குறைவே ஆகுமென்றும் எடுத்துக் கூறினர்.

---

கோலாலம்பூர்

## இராமநாதபுரம் ஜில்லா பொதுஜன சபை

### இரண்டாம் ஆண்டுவிழா

(திரு. C. S. குமரசாமியிடம் இருந்து)

சென்ற 1—11—36 ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் 3 மணிக்கு இராமநாதபுரம் ஜில்லா பொதுஜன சபையின் இரண்டாம் ஆண்டின் நிறைவு விழா கோலாலம்பூர் நகர மண்டபத்தில் சபையின் தலைவர் தோழர் S. அழகப்பா அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

(உள்ளூர் சங்கங்களுக்கும் வெளியூர் சங்கங்களுக்கும் அழைப்புகள் அனுப்பப்பட்டிருந்தன.)

சபையின் சங்கீத உபாத்தியாயர் S. சுந்தரம் அவர்களால் பள்ளி மாணவரைக் கொண்டு சங்கீதக் கச்சேரி கௌரவமாக நடத்திக் கொடுக்கப் பட்டது.

தலைவர் முகவுரை நிகழ்த்தியபின் கௌரவ காரியதரிசியால் தயாரிக்கப் பட்ட அறிக்கையும் வரவு செலவு கணக்குளும் வாசித்து பொதுஜனங்களால் அங்கீகரிக்கப்பட்டன.

| | |
|---|---|
| சபையின் மொத்த வசூல் | $ 136·82 |
| தேசபயிற்சி நிலுவை | 15 |
| மொத்தம் | $ 151 82 |
| செலவு | 62·53 |
| இருப்பு | 89 29 |

உத்தியோகஸ்தர் தேர்தல்

(1) தலைவர் S. முனியாண்டி
(2) உபதலைவர் S. அழகப்பா
(3) உபதலைவர் P. குமாசாமி
(4) கௌரவ காரியதரிசி V. P. சாரங்கபாணி
(5) கௌரவ பொக்கிஷதார் N. V. S. லெி

நிர்வாகஸ்தர்கள்

பி. குப்புசாமி
க. வே. ஷண்முகம்
S. M. சுப்பையா
M. K. ஆறுமுகம்
M. அழகேன்
மா. செ. பரிமனம்
M. S. அழகு

வெற்றி முரசு உதவி ஆசிரியர் நாகை தோழர் N.B சாமியப்பன் அவர்கள் நமது நிலை. என்றவிஷயத்தைப் பற்றியும் பிள்ளையார்பட்டி தோழர் M. முத்தழகு அவர்கள், ஜில்லா வலிபர்கள் செய்ய வேண்டிய வேலை என்ன? என்ற விஷயத்தை பற்றியும், சென் பென்மாரி மா. சே. பரிமனம் அவர்கள் ஒற்றுமை என்றவிஷயத்தை பற்றியும் தோழர் S. குருநாதன் அவர்கள் வாலிபர் கடமை என்றவிஷயத்தை பற்றியும் தோழர் S. நாகம்மாள் அவர்கள் புரோகிதச் சடங்கு என்ற விஷயதைப் பற்றியும் நீண்ட நேரம் பொதுஜனங்களுக்கு நெஞ்சில் பதியுமாறு அழகாக பேசி முடித்தார்கள்.

தலைவர்முடிவுரைநிகழ்த்தியபின் காரியதரிசியால், சொற்பொழிவு வாற்றிய தோழர்களுக்கும் இந்த சபைக்கு தாராளமாக இரண்டு வருடகாலமாய் இடம் வசதி அளித்த கிருஷ்ரோட் பெரியாருக்கும் விழாவுக்கும் இந்த இரண்டு வருடகாலமாய் பொறுப்பேற்று வேலை செய்த உத்தியோகஸ்தர்களும் குறித்த நோக்கு விஜயம் செய்த சபையின் அங்கத்தினர்களுக்கும் ஏனைய சகோதர சகோதரிகளுக்கும் வந்தனத்தை தெரிவித்து சில தீர்மானங்கள் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டன.

# ‘சந்திரகாந்தா’

## கதைச் சுருக்கம்

சுண்டூர் ராஜகுமாரன் சிறு குழந்தை. தாய் விதவை. இவர்கள் போரால் ரீஜண்டு ராஜ்யத்தை ஆளுகிறான். அவனுக்குக் குழந்தை இளவரசனைத் தொலைந்துவிட்டால் ராஜ்யத்தை தானே அனுபவிக்கலாமென்ற ஆசை எழுந்தது. அதற்காக குண்டுராயன், தாண்டவராயன் இருவரை ஏவுகிறான். இளவரசனின் தாய் மாமன் அந்த சதியை நிறைவேறாது தடுத்துவிட்டான்.

பல வருஷங்கள் கழிந்துவிட்டன.

சென்னையில் ஜனவரி முதல் தேதிக் கொண்டாட்டம், பெரிய மைதானத்தில் ராஜாங்கத் துருப்புகளின் அணிவகுப்புக் காட்சிகளைக் காண ஏராளமான ஜனக்கூட்டம் வந்து கூடியிருக்கிறது. அணிவகுப்புகள் நடந்து முடிந்தவுடன் ஜனங்கள் பிரிந்து கலைகிறார்கள். சுண்டூர் ராஜகுமாரன் ஒரு டாக் கார்டில் கூட்டத்தின் மத்தியில் வெகு வேகமாக வருகிறான். வழியில் குதிரை மிரண்டு கட்டுக்கடங்காமல் போய்விடுகிறது. குதிரையின் காலடியில் அகப்பட்டுக்கொள்ள விருந்த சந்திரகாந்தாவை ராகவரெட்டி சமயத்தில் காப்பாற்றுகிறான்.

ராகவரெட்டியின் மேல் சுண்டூர் ராஜகுமாரன் பொறாமையும் கோபமும் அடைகிறான். எப்படியாவது அவனைத் தொலைத்துவிட வேண்டுமென்று உறுதி செய்துகொண்டு அதற்காகத் தன் அம்பட்ட முனிசாமியிடம் யோசனை செய்கிறான்.

இடையில் ஒரு கொலைக்கேஸ் விசாரணைக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த குண்டுராயனையும் தாண்டவராயனையும் வழிமறித்து அண்ணுசாமி கொள்ளையடித்துக் கொண்டுபோய் விடுகிறான். மறுபடி தாண்டவராய அய்யர் வீட்டில் கல்யாணம் நடந்து கொண்டிருக்கும் பொழுதும் வந்து அங்கேயும் கொள்ளையடிக்கிறான். பிறகு சுபேதார் அண்ணுசாமி என்கிற பெயருடன் ராகவரெட்டியாரிடம் வந்து அவரை சிநேகம் செய்து கொள்கிறார்.

சுண்டூர் இளவரசனின் சதிகளையெல்லாம் அவர் ரகசியமாக அறிந்து கொள்ளுகிறார். நடுவில் ஒரு நாள் ராகவரெட்டி மேல் சுண்டூர் ராஜகுமாரனின் கோபம் அதிகமாக, ஒரு சம்பவம் நடக்கிறது. ராஜகுமாரன் ஒரு நாள் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்த சந்திரவதனாவை பலாத்காரமாக முத்தமிட முயலுகையில் அவள் கூச்சலைக்கேட்டு அங்குவந்த ராகவரெட்டி ராஜகுமாரனை அடித்து அவளை விடுவிக்கிறான்.

அதனால் ராஜகுமாரன் கோபம் அதிகரிக்க அவனுடைய சதியோசனைகளும் பலமாகின்றன. ராகவரெட்டி ஒரு பறச்சியிடம் சிநேகம் வைத்திருந்ததாகவும் யாரிடமோ பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கியதாகவும் சாட்சிகள் தயாரித்து அவமானப்படுத்தவும், சிறைக்கனுப்பவும் அம்பட்ட முனுசாமியின் சொல்லும் யோசனைகளை நடத்தி வைக்கும்படி உத்தரவிடுகிறான்.

ராகவரெட்டியைக் கெடுக்கச் செய்யும் இந்த சதிகளை அறிந்த சுபேதார் அண்ணுசாமி, ராகவரெட்டியைப் பிடித்துக்கொண்டு போகவந்த அம்பட்ட முனுசாமியை நன்றாக வெளுக்கிறார். அவனிடமிருந்து அதையெல்லாம் எழுதி வாங்கிக் கொள்ளுகிறார். அந்தக் கடிதத்தைத் திருடிக் கொண்டுபோக இரவில் மாறுவேடத்தில் வந்த சுண்டூர் இளவரசனையும் மடக்கித் தன் புறத்தி அவனிடம் அதையெல்லாம் ஒப்புக்கொண்டு எழுதித் தாச்செய்து வாங்கிக் கொள்கிறார்.

சந்திரவதனாவினால் அவமானமடைந்த சுண்டூர் இளவரசன், இளையவளான சந்தரகாந்தாவின் கபடமற்ற மனதைக் கலைத்து அவளுக்கு ஆசை வார்த்தை காட்டி அவள் கற்பைக் கெடுத்துவிடுகிறான்.

திருக்கன்னூர் பண்டார சன்னதி வெளியே பூஜை உபன்னியாச ஆடம்பரங்களெல்லாம் செய்துவிட்டு, மடத்தின் இரகசிய வாசல் வழியாகச் சாங்க வீட்டிற்குப் போகிறார். அங்கு பல ஜாதிப் பெண்களை வைத்துக்கொண்டு குடித்துக் கூத்தடிக்கிறார். அதில் ஒரு மாது தனக்கு நவரத்ன கண்டி வேண்டுமென்று கேட்க வாங்கித் தருவதாக வாக்களிக்கிறார்.

சுபேதார் அண்ணுசாமியிடம் அடிபட்ட அம்பட்ட முனிசாமி ஊரைவிட்டு ஓடிப்போகும்போது போலீஸ் கமிஷனருக்கு சுண்டூர் இளவரசன் சதியையெல்லாம் கடிதமாக எழுதியனுப்பி விடுகிறான். அதைப் படித்த கமிஷனர் துப்பறியும் கோவிந்தனை அழைத்து அதைப்பற்றி விசாரிக்க ஏற்பாடு செய்கிறார்.

திருக்கன்னூர் பண்டார சன்னதியும் சுண்டூர் இளவரசனும் விட்டல்தாஸ் என்பாரிடமுள்ள ஒரு ரத்ன கண்டியை திருடிக்கொண்டு வர முடிவு செய்கிறார்கள். லக்ஷ்மிகாந்தம் நாயுடு வீட்டில் பெரியதொரு விருந்துநடக்கிறது. தாஸ் தமது ரத்ன கண்டியை ஆடம்பரமாக அணிந்துகொண்டு வந்திருக்கிறார். திடீரென்று அங்கிருந்த எலக்டிரிக் விளக்குகள் அணையவே யாரோ தாஸியின் ரத்ன கண்டியை அபகரித்துக்கொண்டு போய்விடுகிறார். உடனே அங்கே ஏக களேபரமாக ஆகிவிடுகிறது. போலீஸார் வரவழைக்கப்படுகிறார்கள். விசாரணை செய்த இன்ஸ்பெக்டர் எலெக்ட்ரிக் விளக்குகள் சப்ளை செய்த கம்பெனியின் ஆளைக் கூப்பிடச் சொல்லுகிறார். ராகவ ரெட்டியார் தான் அன்று தமது கம்பெனிக்காக அங்கே வந்து வேலை செய்து கொண்டிருந்தார். ஆகையால் அவர் வருகிறார். அவரை விசாரித்த இன்ஸ்பெக்டர் ரத்னகண்டி திருட்டுக்கு அவர் மீது சந்தேகம் கொள்ளுகிறார். அவரைக் கைது செய்யப்போகும் சமயத்தில் டெலிபோன் மூலம் அந்தத் திருட்டுச் செய்தியைக் கேள்விப்பட்ட துப்பறியும் கோவிந்தன் அங்கு வந்து சேருகிறார். கோவிந்தன் யோசனைப்படி ராகவ ரெட்டி கைது செய்யப்படாமல் விடுவிக்கப்படுகிறார்.

துப்பறியும் கோவிந்தன் தமது ஆராய்ச்சிகளைத் தொடங்குகிறார்.

ராகவரெட்டியாருக்கும், சந்திரவதனாவுக்குமிடையில் ஒரு புனிதமான காதல் உணர்ச்சி எழுந்து வளருகிறது. ஒரு நாள் இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், சந்திரவதனாவினிடம் ராகவரெட்டி தான் அனாதையென்று தெரிவிக்கிறான். தன் காதல் உண்மையானதாகையால், இந்த விஷயத்தினால் அது தளர்ந்து விடாது என்று சந்திரவதனா உறுதி கூறுகிறாள். இதை தற்செயலாக அங்கு வந்த சந்திரகாந்தா பார்த்துப் பொறாமைப் படுகிறாள்.

இந்தச் சமயத்தில் சுண்டூர் இளவரசனுக்கு மணம் செய்விக்கவேண்டுமென்று ரீஜண்ட் முயற்சி செய்கிறார். இளவரசன் தனக்குப் பிடித்த ஒரு பெண்தான் வேண்டுமென்று வற்புறுத்துகிறான். அந்தப் பெண்ணை அழைத்து வருவதாகவும் சொல்லுகிறான். அதன்படி சில ஆட்களை ஏவி ஒருநாள் இரவில் தூங்கிக்கொண்டிருக்கும் சந்திரவதனாவைத் தூக்கிக்கொண்டு வரச் சொல்லுகிறான். இந்த விவரங்களைத் துப்பறியும் கோவிந்தன் யுத்தியால் அறிந்த சந்தரகாந்தா குறிப்பிட்ட இரவில் தன் சகோதரியின் அறையில் படுத்துக் கொள்ளுகிறாள். ஆட்கள் வந்து அவளையே சந்திரவதனா என்று நம்பி தூக்கிக்கொண்டு போய் விடுகிறார்கள். இரவிலேயே சுண்டூர் அரண்மனையில் அவளுக்கும் இளவரசனுக்கும் விவாகம் நடைபெறுகிறது.

இந்த விவரங்கள் பத்திரிகை மூலம் அறிந்த ராகவரெட்டி சந்திரவதனாவின் வீட்டிற்குப் போகிறான். பத்திரிகையில் இளவரசனுக்கும் சந்திரவதனாவுக்கும் மணமானதாகப் போடப்பட்டிருக்கிறது. அங்கே வந்தபிறகுதான் சகோதரிகள் இரவில் படுக்கை மாறிப் படுத்த விவரம் தெரிய வருகிறது. உடனே பத்திரிகையில் பேரை மாற்றச் சொல்வதற்காகப் புறப்படுகிறான். அரண்மனையில்தான் ஏமாந்ததை யறிந்த சுண்டூர் இளவரசன் எப்படியாவது அந்த சந்திரவதனாவைக் கற்பழிக்காமல் விடுவதில்லை என்று சபதம் செய்துகொண்டு அவள் வீட்டிற்கு வருகிறான். அங்கு சந்திரவதனாவைப் பலாத்காரம் செய்ய முயலுகையில் அங்கு ராகவரெட்டியுடன் வந்து காத்திருந்த சுபேதார் அண்ணுசாமி அவனை வர்ம அடி அடித்து முடக்கிப் போட்டு விடுகிறார். அன்று இரவு இருட்டிய பிறகு இளவரசனை அவன் அரண்மனையில் கொண்டுபோய் விட்டு விடுகிறார்.

அந்த சமயத்தில் தான் சந்திரவதனா சந்தர காந்தா இருவரும் தங்கள் அத்தை என்று நம்பியிருக்கும் பாக்கியம் என்ற அவர்கள் தாய், தன் கணவர் நாராயண ரெட்டியார் சுபேதார் அண்ணுசாமி என்ற பெயருடன் இருப்பதை அறிகிறாள். அவர் அவளைத் தேற்றி ‘பயப்படாதே’ எல்லாம் நன்மைக்கே என்று சமாதானம் செய்கிறார்.

தான் மணந்தது சந்தரகாந்தாவையே என்று அறிந்த இளவரசன் திருக்கன்னூர் பண்டார சன்னதிக்கு ஒரு கடிதம் எழுதுகிறான். அதைத் தன்னிடம் நடராஜன் என்று மாறு வேடத்தில் வேலைக்காரனாக இருக்கும் துப்பறியும் கோவிந்தனிடமே அனுப்புகிறான். அதில் தன்னிடம் ஒரு அழகிய பெண் இருப்பதாகவும், வேண்டுமானால் அவளை அழைத்துக்கொண்டு போய் வைத்துக் கொள்ளும்படியும் எழுதுகிறான்.

கடிதத்தைக் கொண்டுபோன கோவிந்தன் பண்டார சன்னதியுடன் இரகசிய வழியாகப்போய் அவனுடைய திருவிளையாட்டுகளையும், திருட்டுப் போன ரத்ன கண்டியையும் அங்கே காண்கிறான். அங்கு, சிறைப்பட்டு வருந்திக்கொண்டிருந்த ஒரு வெள்ளைக்காரப் பெண்ணிடமிருந்து சில தகவல்களும் அறிந்துகொண்டு, அவர்களையெல்லாம் கூடிய விரைவில் விடுப்பதாக உறுதி கூறிவிட்டு கமிஷனருக்கு அவரிடமிருந்து ஒரு கடிதம் வாங்கிக் கொண்டு வருகிறான்.

அரண்மனையில் தன் விதியை நினைத்து வருந்திக்கொண்டிருந்த சந்தரகாந்தாவிடம், ராகவரெட்டி போய் அவளைத் தேற்றி, அவளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டுபோக முயன்று ஒரு நூலேணி வழியாய் இறங்குகையில் அங்கு தற்செயலாக வந்த ரீஜண்ட் பார்த்து விடுகிறான். ரீஜண்ட் ராகவரெட்டியைத் தன் கட்டாரியால் குத்தப் போகையில், அங்கு வந்த கோவிந்தன் அவனைத் தடுத்து விடுகிறான். ராகவரெட்டி சந்தரகாந்தாவைக் காப்பாற்ற முடியாமல் போய் விடுகிறான்.

அதன் பிறகு அங்கு வந்த பண்டார சன்னதி தன் ஆட்களுடன் சந்தரகாந்தாவை வாயில் துணியை யடைத்துத் தூக்கிச் சென்று விடுகிறார்கள். அரண்மனைத் தோட்ட வாசலில் அவளை ஒரு வண்டியில் வைத்துப் புறப்படப் போகும்போது அங்கு வந்த சுபேதார் அண்ணுசாமி தன் குதிரைச் சவுக்கினால் அவர்களை வெளுத்துத் தாத்துகிறான். பிறகு சந்தரகாந்தா வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுகிறாள். வீட்டில் சகோதரிகள் இருவருக்கும் தங்கள் பெற்றோர் யாரென்ற உண்மை தெரிகிறது. மகிழ்ந்து உருகிறார்கள்.

திருக்கன்னூர் பண்டார சன்னதி தன் பெண் குழாத்துடன் நலக்கிரீடை செய்து கொண்டிருக்கும்போது துப்பறியும் கோவிந்தன் அங்கு வந்து அவனைக் கைது செய்ய முயலுகிறான். உடைகளை மாற்றி வருவதாகச் சொல்லி, அறையினுள் போன பண்டாரச் சன்னதி விஷ மருந்தி மாளுகிறார். மற்றப் பெண்களை அழைத்துக்கொண்டு கோவிந்தன் அங்கிருந்து போகிறான்.

சுண்டூர் இளவரசனின் துர்நடத்தைகளாலும், மற்றும் பல சம்பவங்களாலும் மனம் கலங்கிய ரீஜண்ட் இளவரசனுக்கு முடி சூட்ட ஏற்பாடு செய்கிறான். அரண்மனையில் முடிசூட்டு வைபவம் ஆரம்பமாகிறது. அந்தச் சமயத்தில் அங்கு தோன்றிய சுபேதார் அண்ணுசாமி என்ற நாராயண ரெட்டி அந்த ரீஜண்டின் அக்கிரமங்களை வெளியாக்கி, உண்மையான பட்டத்திற்குரிய ராஜகுமாரன் ராகவரெட்டியே என்பதை நிரூபிக்கிறான்.

அதே சமயம் துப்பறியும் கோவிந்தன் போலீசாருடன் வந்து சுண்டூர் போலி இளவரசனை ரத்ன கண்டியைத் திருடிய குற்றத்திற்காகக் கைது செய்கிறான். அதையெல்லாம் கண்ட ரீஜண்ட் அங்கேயே விழுந்து மாளுகிறான். முடிசூட்டுக்காக வந்திருக்கிற கவர்னர் பிரதிநிதி ராகவரெட்டியாரின் முடிசூட்டுக்கு ஏற்பாடு செய்யும்படி உத்தரவிடுகிறார்.

ராகவரெட்டிக்கும் நாராயண ரெட்டியார் தன் மாமன் என்பதும் சந்திரவதனா அவர் புதல்வியே என்பதும் தெரியவருகிறது. எல்லோரும் அரண்மனையைச் சுற்றிப்பார்த்து வருகையில் அங்கு ஒரு அறையில் அடைத்து வைக்கப்பட்டிருந்த ஒரு பைத்தியக்காரியைப் பார்க்கிறார்கள். நாராயண ரெட்டியாருக்கு அவள் யாரென்பது தெரியும். ராகவ ரெட்டியார் அந்த அம்மாள் முன் போகிறார். அவரைக் கண்டவுடன் அவளுடைய பைத்தியம் தெளிவடைந்தது. ‘என் மகனே’ என்று கட்டிக்கொள்கிறாள். உடனே நாராயண ரெட்டி விவரங்களைத் தெரிவிக்கிறான். அவள் தன் தங்கை ராகவ ரெட்டியாரின் தாய் என்பதை தெரிவிக்கிறார்.

கடைசியாக தியாகமும், சத்தியமும் வெற்றி பெற்றுவிட்டன. ரீஜன்

டின் துராசைகளினால் துன்பங்களுக்குள்ளாகிப் பலவாறுகப் பிரிந்துபோன ராஜகுடும்பம் ஒன்று சேர்ந்துவிட்டது. எல்லோரும் குதூகலமாக இருக்கிருர்கள். அந்தச் சந்தோஷ சமயத்தில் சந்திரவதனுவும் ராகவ செட்டியும் பூங்காவில் சந்திக்கிருர்கள். அவர்களுடைய காதல் மலர் மணம் வீசித் திகழ்கிறது.

---

## பினங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

### மூன்ருவது வருட ஆருவது நிர்வாக சபைக் கூட்டத்தின் நிகழ்ச்சி

16-11-1936 திங்கட்கிழமை மாலை 4-30 மணிக்கு கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. அ. மு. க. வெங்கிடாசலஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 16 அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தார்கள்.

மூன்ருவது வருட ஐந்தாவது நிர்வாக சபைக் கூட்டத்தின் நிகழ்ச்சிகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று தலைவர் கையெழுத்து வாங்கப்பெற்றது.

தாது வருடம் ஐப்பசி மாதம் 30-ந் தேதி வரையிலுள்ள சங்க வரவு செலவு கணக்குகள் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றன.

சங்கத்திற்கு வந்திருக்கும் கடிதங்களையும், அறிக்கைகளையும் வாசித்துக் காண்பிக்கப்பெற்று ரிகார்டு செய்யப்பெற்றது.

மன்னர்பிரான் மகுடாபிஷேகத்தை முன்னிட்டு பினங்கு மத்திய மகுடாபிஷேகக் கமிட்டியிடமிருந்து வந்த லெட்டரையும், மேற்கண்ட விஷயமாக ஆனரபிள் மிஸ்டர் அப்துல்காதர் இடமிருந்து கிடைக்கப்பெற்ற கடிதத்தையும் வாசித்துக் காண்பிக்கப்பெற்று ஏற்கெனவே பினங்கு நகரத்தாரவர்கள் தீர்மானித்தபடிச் செய்வதென்றும் இவ்விழாவை கொண்டாடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய நம் சங்கத்து தலைவரை தலைவராக கொண்ட நம் சங்க நிர்வாக சபை அங்கத்தினர்கள் 21 பேர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை நியமிப்பதென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

பினங்கு ஸ்டாம்பு ஆபிஸிலிருந்து கார்ப்பரேஷன் டியூட்டி விஷயமாக நம் சங்கத்து முதலாவது ஆண்டு சங்க வரவு செலவு கணக்குகளை அனுப்பி வைக்கப்பெற்ற விபரங்களை காரியதரிசியால் அறிவிக்கப்பெற்றது.

ஸர்க் கப்பலுக்கு போய்வர பினங்கு ஐலேகர் கம்பெனியாரால் அளிக்கப்பெற்ற பாஸைப்பற்றி இந்தியா—கவர்மெண்ட் ஏஜெண்ட்டுடன் கலந்து வேண்டுவன செய்வதென தீர்மானிக்கப்பெற்றது.

மலாயாவுக்கு இந்தியா கவர்மெண்டால் அனுப்பப்பெறும் தூதுகோஷ்டியிடம் நம் சங்கத்தின் சார்பாக தயாரித்து இருக்கும் மகஜரில் கண்ட விபரங்களை வாசித்துக் காண்பிக்கப்பெற்று கோலாலம்பூர் செட்டியார்கள் வர்த்தக சங்கத்திற்கு அனுப்பி வைப்பதென்றும் தீர்மானிக்கப்பெற்றது என காரியதரிசி அறிவிக்கிருர்.

---

## சிங்கப்பூர் நாடுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம்

### ஆருவது வருட பத்தாவது நிர்வாக சபைக்கூட்டம்

11—11—1936-ந் தேதி மாலை 5-15-க்கு சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. சித. அ. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. 9 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரவர்களின் புதல்வர் குமார ராஜா முத்தையா செட்டியார் பி. ஏ. அவர்கள் சென்னை மாகாண கவர்ண்மெண்டின் கல்வி மந்திரி பதவியை ஏற்று நமது சமூகத்திற்கு பெருமதிப்பு அளித்ததற்கு நமது மகிழ்ச்சியை அன்னார்க்கும் ராஜா ஸர் அவர்களுக்கும் மதராஸ், மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுக்கும் தெரிவித்துக் கொள்வதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

கோலாலம்பூர் சங்கத்திலிருந்து வந்த 7-11-36உ லெட்டர் வாசித்துக் காண்பிக்கப் பெற்று தூது கோஷ்டியினருக்கு நாம் சமர்ப்பிக்கும் மகஜரில்; காலனி சட்ட சபையிலும் நகர சபையிலும் செட்டியார்களுக்கு தனிப்பிரதிநிதித்துவம் வழங்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதென்று தீர்மானிக்கப்பெற்றது.

முன்போல் வெள்ளைப் பாரங்களில் ஸ்டாம்ப் அடித்துத் தரவேண்டுமென்றும். காப்பிகளை ஸ்டாம்ப் சட்டத்திலிருந்து விலக்க வேண்டுமென்றும் லாயர் ரோலடக் அண்ட் டேவிட்ஸன் ஆபீஸ் மூலம் ஸ்டாம்ப் கமிஷனருக்கும் அட்டோர்னி ஜெனராலுக்கும் கடிதப் போக்குவரத்து செய்வதெனத் தீர்மானிக்கப் பெற்றது.

வருகிற டிசம்பர் 6-ந் தேதி மலாயாவுக்கு வரவிருக்கும் இந்திய தூது கோஷ்டியினர்களுக்கு நமது சங்கத்தின் சார்பாக ரிங்கி 150—செலவிற்குள் தேநீர் விருந்தளிப்பதென்று தீர்மானிக்கப் பெற்றது என காரியதரிசி அறிவிக்கிருர்.

## புலையர்களுடன் பிராமணர்கள் கடவுள் தரிசனம்

### திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியாரின் அறிக்கை

இந்தியாவிலுள்ள அதி முக்கியமான பெரிய கோவில்களில் ஒன்றெனக் கருதப்படுவதும், திருவாங்கூரின் தலைநகராகிய திருவனந்தபுரத்தில் அமைந்திருப்பதுமான, ஸ்ரீ பத்மநாபஸ்வாமி ஆலயத்துக்குள் திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார், தாம் நான்கு புலைய மாணவர்களுடன் சென்று தரிசித்த செய்தியை வெளியிட்டிருக்கிறார். அதில் அவர் கூறுவதாவது:—

இன்று காலை (டிசம்பர் 1-ந் தேதி) நான் நான்கு புலைய மாணவர்களுடனும் சில ஜாதி ஹிந்து நண்பர்களுடனும் ஸ்ரீ பத்மநாபஸ்வாமி ஆலயத்திற்குச் சென்றேன்.

தீண்டத் தகாதவர்களும், நெருங்கத் தகாதவர்களுமான அவர்ணர்களுள் மிகக் கீழ்ப்பட்டவரென்று சொல்லப்படும் இனத்தைச் சேர்ந்தவர்களே இப்புலைய மாணவர்கள். இவர்கள் உயர் சாதியாரெனச் சொல்லப்படுபவர்கள் நீராடும் திருக்குளத்தில் ஸ்நானம் செய்து பக்திக்கறிகுறியான திருநீறணிந்து என்னுடன் கோயிலுக்குள் வந்தனர். யாதொரு விதமான எதிர்ப்போ, அதிருப்திக் குறிப்போ தென்படவில்லை. கோவிலின் எல்லாப் பிரகாரங்களையும் சுற்றினோம். கர்ப்பக்கிரகத்தை அடுத்திருக்கும் ஒற்றைக்கல் மண்டபத்தின் மீதேறிச் சென்றோம். சாதி இந்துக்கள் எவ்வளவு தூரம் செல்வார்களோ அவ்வளவு தூரம் சென்று பிரசாதம் பெற்றோம்.

கோவில் அர்ச்சகர்கள் முகத்தில் சந்தேகம், குரோதம், பயம் முதலிய உணர்ச்சிகள் யாதொன்றுமே தென்படவில்லை.

ஸ்ரீமுகம் நிறைவேற்றப்பட்ட முறையில் யாதொருவிதமான குறையுங்கூற இடமில்லை.

எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே நிறைவேற்றி வைத்திருக்கின்றனர். மீண்டும் ஹிந்து சமூகத்தில் சேர்க்கப் பெற்ற ஆனந்தம் அம்மாணவர்களது முகத்தில் தாண்டவமாடியது. இழந்த சேயைப்பெற்ற தாயைப் போன்ற உணர்ச்சியை யானும் அடையப் பெற்றேன். எனது விழிகளினின்று ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. குழப்பம், சச்சரவு, பலாத்காரம் முதலியவற்றிற்கிடங்கொடாத முறையில் இத்தனை பெரிய காரியம் சாதிக்கப் பெற்றிருப்பதை என்னுங்கால் நம்முன் ஏற்படும் நன்றி யுணர்ச்சி நாவினால் வருணிக்குந் தன்மைத்தன்று.

### பெயிஸ்பூர் காங்கிரஸ் ஜோதி ஊர்வலம்

ஒலிம்பிக் வழக்கத்தை அனுசரித்து காங்கிரஸ் சுடர் தொண்டர்களால் தாங்கிச் செல்லப்படும். அதற்குரிய சகல ஏற்பாடுகளும் முடிவாகி விட்டன.

தொண்டர்கள் ஊர்வலம் முதலாவது காங்கிரஸ் நடைபெற்ற கோகுல்தாஸ் தேஜ்பால் ஹோட்டலிலிருந்து ஆரம்பமாகும். காங்கிரஸ் சுடர்தாங்கிய தொண்டர்களின் ஊர்வலம் சில முக்கியமான ஊர்களின் வழியாகச் செல்லும். டிசம்பர் 27-ந் தேதியன்று காங்கிரஸ் கொடியேற்றுவிழா ஆரம்பமாவதற்குச் சற்று நேரத்துக்கு முன்னர் பெயிஸ்பூர் காங்கிரஸ் நகரத்துக்கு வந்து சேரும். 27-ந் தேதி அன்றுதான் காங்கிரஸ் மகாசபை ஆரம்பமாகிறது.

## தலைவரின் அறிக்கை

### பெண்களை மறக்கவேண்டாம்

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர் மா. கா. கமிட்டிகளுக்கும், மா. கா. சட்டசபைக் கமிட்டிகளுக்கும் 2 அறிக்கைகளை அனுப்பியுள்ளார். அவற்றில் அவர் கூறும் முக்கியமான விஷயங்கள் கீழ்வருமாறு:—

நாம் சொந்தக் காரணங்களுக்காகப் போராடவில்லை. பெரிய லக்ஷியத்திற்கெனவே போராடுகிறோம். ஆதலால் காங்கிரஸ் அபேட்சகர்கள் அனைவரும் தேர்தல் அறிக்கையின் அடிப்படையான நோக்கங்களை நன்றாய் அறிய வேண்டும்.

அவ் அறிக்கைகளைப் பொது மக்களுக்கு ஏராளமாக வழங்க வேண்டும். காங்கிரஸின் நோக்கத்தையும் காங்கிரஸ் பிரதிநிதிகளின் நோக்கத்தையும் யாவரும் உணரும்படிச் செய்யவேண்டும்.

பெண்களுக்கென ஒதுக்கப்பட்ட விசேஷ ஸ்தானங்கள் ஒருபுறமிருக்க பொதுத் தொகுதிகளிலிருந்து பல மாதர்களை தேர்ந்தெடுத்தனுப்ப வேண்டும். பொது வேலைகளிலும், தேசிய வேலைகளிலும், அவர்கள் சமபங்குபெற உரிமை பெற்றிருக்கிறார்கள் என்பதை செயலிலுங் காண்பித்து விடவேண்டும்.

## வருணனின்

# கண் காட்சி

### சென்ற வாரம்

அரசப் பிரதிநிதிக்கு கோயமுத்தூர் ராமலிங்கச் செட்டியாரிடமிருந்து ஒரு 'பொட்டலம்' சென்றது என்று எழுதினேன். இந்த வாரமோ இரண்டு மூட்டைகளைப்பற்றி எழுத வேண்டிய நிர்ப்பந்தமேற்படுகிறது. தஞ்சாவூர் சேர்மன், ராவ்பகதூர் ராமநாதன் செட்டியார் தமது பட்டம், சன்னத், பாட்ஜ் எல்லாவற்றையும் மூட்டை கட்டி அனுப்பிவிட்டார். கூடலூர் அன்பராகிய திரு. கெ. சீதாராம ரெட்டியாரும் தம் ராவ்பகதூரையும் அது சம்பந்தமான உபகரணங்களையும் பார்சல் செய்துவிட்டார். இதற்குள்ளாக வைஸிராய் அவற்றைப் பெற்று இந்திய மந்திரிக்கு தகவல் அனுப்பியிருப்பாரென்று கருதுகிறேன். இது போல் இன்னும் எத்தனை மூட்டைகள் நடப்போகின்றனவோ?

### இந்த பார்சல்கள்

எல்லாம் பிரபு வெலிங்டன் அவர்கள் கையில் கிடைக்கவேண்டுபவையாகும். நல்ல வேளை! அவர் தப்பிக்கொண்டார்! அவரைப்போல் பெரியார் ஹோர்துரையும் உத்யோகம் மாறுவதன் மூலம் மூட்டை பெறும் நிர்ப்பாக்கியத்திலிருந்து விடுதலை பெற்றுக்கொண்டார்!

### அந்தப் பெரியார்

ஒரு முறை காங்கிரசைக் குறிப்பிட்டு பேசுகையில், 'குலைக்கட்டும்' என்ற பிரியமான பதத்தை வாய் குளிரச் சொன்னார். இப்போது சொல்வாரா அப்படி?—போகட்டும். ராவ்பகதூர், திவான் பகதூர்ப் பட்டங்களை ஒருவர் திருப்பிக் கொடுப்பதன் மூலம் காங்கிரஸ் போராட்டம் என்னும் புதிய ஆஸ்ரமத்திற்காக தன் பந்தங்களைத் துறக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளல் வேண்டும். சர்க்காரின் அருமையான குழந்தைகள் எனப்படுவோரெல்லாம் இவ்வாறு பட்டத்தை துறந்துவிட்டு சுயராஜ்யத்திற்காக சர்க்காரோடு போராடுவதைவிட காங்கிரசுக்கு வெற்றி யென்னவேண்டும்?

### இதுமட்டிலுமா?

இன்னொருபால் காங்கிரஸ் ஜோதி சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றது. அதனுடன் போட்டி போட்ட ஜஸ்டிஸ் காரர்களும் ராஜாக்களும் மண் கவ்வியிருக்கின்றனர்.

### மேல் தஞ்சை

ஜில்லாவில் 37 ஸ்தானங்களில் 26 ஸ்தானங்களை காங்கிரசார் பிடித்துக் கொண்டார்கள். ராமநாதபுரம் ஜில்லாவில் இதுகாறும் 46 ஸ்தானங்களில் 30 ஸ்தானங்களை காங்கிரஸ் கைப்பற்றி விட்டது. கீழ் தஞ்சைப் போர்டிலுள்ள 33 ஸ்தானங்களில் 16 ஸ்தானங்களை (இதுவரையிலும்) காங்கிரஸ் அடித்து விட்டது. கோயமுத்தூரும் சேலமும் அப்படியே காங்கிரஸ் கைக்கு வந்துவிட்டன. சேலத்தில் இதுகாறும் 41 சர்க்களுக்கு மட்டிலுமே வெற்றிச் செய்தி வெளிவந்திருக்கிறது. அவற்றில் 32 ஸ்தானங்கள் காங்கிரஸ் கைக்கு வந்துவிட்டன. ஏற்கெனவே சென்னை நிலைமையும் இதர சில ஜில்லாகளின் நிலைமையும் வாசகர்களுக்குத் தெரியும். இவ்வாறே ஜில்லாவுக்குப் பின் ஜில்லாவாக காங்கிரஸ் கைக்கு வந்துகொண்டிருந்தும் நமது ஜஸ்டிஸ் கட்சிக்கு வாய்ப்பேச்சு ஒழியவில்லை.

### அதன் மந்திரி

யொருவர் வட ஆர்க்காட்டில் என்னென்னமோ ஒருவரும் கண்டுபிடியாத ஜஸ்டிஸ் பிரதாபத்தை விளக்கிவிட்டு, 'பண்டிதர்கள் வரலாம்; பண்டிதர்கள் போகலாம்; ஜஸ்டிஸ் கட்சி அப்படியே இருக்கும்' என்கின்றார். பண்டிதர் ஒருமுறை இங்கு வந்து போனதினாலேயே ஜஸ்டிஸ் மண் கவ்வ வேண்டியதாயிற்று! அவர் வந்து வந்து போவாரானால் ஜஸ்டிஸ் அப்படியே எவ்வாறு இருக்கக்கூடும்? வேண்டுமானால் வீறுக்காக பிடிவாதம் பேசும் சில ஜஸ்டிசார் மட்டிலும் அப்படியே ஸ்தம்பித்து இருந்துவிடலாம். வாயினால் பேசுவது நாவுடையவர்கட்கெல்லாம் எளிது! சுற்றுமுற்றும் பார்த்துப் பேசுவதே அறிவுடைமை!

### நமது 'விடுதலை'

பத்திரிகை கார்த்திகை 13-ந் தேதி வெளியீட்டில் 'காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கு பெருந் தோல்வி' என்ற தலைப்புடன் ஒரு செய்தியை வெளியிட்டிருக்கிறது. அதனைப் பார்த்ததும் ஆச்சரியப்பட்டு படித்துப் பார்த்தேன். 7 காங்கிரசார்களும் மூன்று ஜஸ்டிசார்களும் வெற்றி பெற்றிருப்பதாகப் போடப்பட்டிருந்தது. இஃது எப்படி காங்கிரசுக்குத் தோல்வியோ தெரியவில்லை. பாவம்! எதையாவது எழுதிப் பார்த்து ஆனந்திக்க வேண்டிய நிலைமை வந்துவிட்டது விடுதலைக்கு!

---

## தமிழ் மாகாண மகாநாடு

### திரு. வேதரத்னம் பிள்ளை தலைமை வகிக்கலாம்

(பின்தி வந்த செய்தி)

டிசம்பர் 1-ந் தேதி கூடிய கா. காரியக் கமிட்டி, வேலூரில் 7-ந் தேதி நடைபெறப் போகும் தமிழ் மாகாண மகாநாட்டுக்கு திரு. சி. என். முத்துரங்க முதலியாரை தலைவராய்த் தேர்ந்தெடுத்தது. அன்னார் தம் அசௌகரியத்தைத் தெரிவித்து கடிதமெழுதியுள்ளார். அதனால் இன்னொரு அபேக்ஷகரான திரு. வேதரத்தினம் பிள்ளை அவர்களே தலைமை வகிக்கக்கூடும். திருவாளர்களான பக்தவத்சலமும், காமராஜ் நாடாரும் திரு. வேதரத்தினம் அவர்களை சிபார்சு செய்திருக்கிறார்கள்.

ஸ்ரீ. பி. எஸ். குமாரசுவாமி ராஜா எம். எல். ஏ. மகாநாட்டில் கொடியேற்று விழாவை நடத்துவார்.

---



ஸ்ரீ. தே. வி.-யின்

# தமிழ்ப் பேழையில் கீதாஞ்சலி

[கீதாஞ்சலி கவிதாகூர் எழுதிய உலகப் பிரக்யாதிபெற்ற நூல். இதற்காகவே கவிசிரேஷ்டர் நோபல் பரிசு கிடைக்கப் பெற்றார். அக் கீதாஞ்சலிக்கு நம் அருமைப் புலவராகிய ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தமிழ் ஆடை புனைந்துள்ளார்கள். சில செய்யுட்களை ஈண்டு காண்க]

I know not how thou singest, my master! I ever listen in silent amazement.

The light of thy music illumines the world. The life breath of thy music runs from sky to sky. The holy stream of thy music breaks through all stony obstacles and rushes on.

My heart longs to join in thy song, but vainly struggles for a voice. I would speak, but speech breaks not into song, and I cry out baffled. Ah, thou hast made my heart captive in the endless meshes of thy music, my master!

—*(English Version.)*

இன்னிசை நீ பாடுமுறை
ஏதுமறியேன் யான்
இரவு பகல் கேட்டின்பமெய்தி
வியந்திடுவேன்
மன்னுலகை ஒளி செய்வ
துன்னிசையி னொளியாம்
வானெங்கு முல வுயிரு
முன்னிசையி னுயிராம்
பன்னரிய நின்னிசை யின்
பாலாறு பொங்கிப்
பாறை களுமுடைத் தருளப்
பாய்ந்தொழுகு மதனோ
டென் னிசையுங் கலந்தொழுக
ஏற்றகுரல் காணேன்
எண்ணி லிசை வலையிலிழுத்
தெனையாளு மிறையே!

—தமிழ் மொழி பெயர்ப்பு.

# நோபல் பரிசு

(ஸ்ரீ சாரதா பிரசாத் பண்டாரியின் கட்டுரையைத் தழுவி எழுதியது)

இம்மாதம் 17-ம் தேதி 3 வருடம் நாஜி சிறைச்சாலையிலிருந்து விடுதலை பெற்ற திரு. ஒஸிட்ஸ்கி என்ற பெரியாருக்கு, நோபல் பரிசு நிர்ணய உத்தியோகஸ்தர்கள் 1935-வது வருடத்து நோபல் சமாதானப் பரிசை அளித்திருக்கிறார்கள். இப் பெரியார் தற்போது எங்கிருக்கிறார் என்று சொல்ல முடியாதாம். நாஜி இயக்கத்தை எங்கும் நிலைநாட்டித் தனது பிரதாபத்தை உலகெங்கும் பரப்ப முனைந்து நிற்கும் ஜர்மனிக்கும் சிறப்பாக ஹெர் ஹிட்லருக்கும் இஃதோர் பெரிய அவமானமாகும். 1936-வது வருடப் பரிசு ஆர்ஜண்டைன் (ஐக்கிய அமெரிக்கா) வெளிநாட்டு மந்திரி திரு. டெலாமாஸ் என்பவருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இரண்டு வருடங்களுக்கு முன்னர் இச்சமாதானப் பரிசு உலகம் போற்றும் காந்திஜீக்கு நல்கப் போகிறார்களென்ற வதந்தி பலமாய் உலாவிக் கொண்டிருந்தது. ரெவரெண்டு ஹோம்ஸ் (அமெரிக்கா) முதலான மதத்தலைவர்களுங்கூட தமது பிரார்த்தனைக் கூட்டங்களின் போது காந்திஜீயை உலகப் பெரியாரென்றும், கிறிஸ்து பெருமானின் புனித வாழ்க்கையின் உதாரண விளக்கமென்றும் உலகறியப் பறை சாற்றிய உண்மை எல்லோரும் அறிவர். அவ்வாறெல்லாம் அன்னவரைப் புகழ்ந்து கொண்டாடிய கிறிஸ்தவ உலகம் அப்பரிசை காந்திஜீக்கே அளிக்கச் செய்யும் உரிமைக்கெனப் போராடாமல் அடங்கி விட்டது. காந்திஜீ கறுநிறத்தவர் வாழும் ஆசியாக் கண்டத்தைச் சேர்ந்தவரென ஒதுக்கப் பெற்றிருந்தால், இயேசுநாதரும், நமது கண்டத்தையே சேர்ந்தவராவார். ஆயினும் என்? அகிம்சா தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட சாத்விகப் போராட்டத்தை நடத்தி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஸ்தம்பிக்கச் செய்த உண்மையை நோபல்பரிசு நிர்ணயக் காரியஸ்தர்கள் புறக்கணித்து விட்டனர். அவர்களது இச்செயல் டாக்டர் ஆல்பிரட் நோபல் அவர்களால் அளிக்கப் பெற்றுவரும் இப்பரிசின் நோக்கத்திற்கே இழிவைத் தந்தது எனக் கூறுதல் மிகையன்று! என்னே நிறக் கொடுமை! ஆயின், காந்திஜீயின் புகழோ நோபல் பரிசின் பெருமையையும் கடந்ததொன்று!

இத்தகைய நோபல் பாரிசின் வரலாற்றைக் கீழே தருகிறோம்.

உலகம் போற்றும் 'நோபல் பரிசு'க்குக் கருத்தாவாய் விளங்குபவர் டாக்டர் ஆல்பெர்ட் வன் ஹார்ட் நோபல் என்பவர். இப்பெரியார் 1833, ஜூலை 10உ ஸ்டாக் ஹோமில் (ஸ்வீடன்) பிறந்தார். இவர் தந்தையின் பெயர் இம்மானுவேல் நோபல். ஆல்பரெட் நோபலின் உடல் பலவீனமாயிருந்தது. அவர் பிறவியிலிருந்தே ஓர் வித தலைநோயால் வருந்திக்கொண்டிருந்தார். இவரது தாயார் இளமைப் பருவத்தில் ஆல்பிரட்டுக்கு வீரர்களின் சரித்திரத்தையும், வேறு சிறு கதைகளையும் சொல்லி அவரை ஆனந்திக்கச் செய்து வந்தாள். அவர் ஓர் சிறந்த பண்டிதை. வல்லமையும் தயாள குணமும் அமைந்தவர். இந்த அம்மையார் தன் மகனது நோய் குணமடைந்துவிடுமாகில், அவன் ஓர் நாள் உலகத்தில் ஓர் பெரியவனாய் விளங்குவான் என்று சொன்னார்.

ஆல்பிரட் விவாகம் செய்து கொள்ளாமலே காலந் தள்ளிவந்தார். ஓர் பெண்ணின்மீது காதல் கொண்டிருந்தார். ஆனால் அப்பெண்மணி தனது இளமைப் பருவத்திலேயே உயிர் துறந்துவிட்டாள். அவளது மரணம் ஆல்பிரட்டுக்கு ஆறாத் துயரை அளித்தது.

ஆல்பிரட் தமது தந்தையாரைப் போலவே ரசாயன சாஸ்திர ஆராய்ச்சியாளராய்த் திகழ்ந்தார். இயந்திரத் தொழில்களிலும் உற்சாகங் காட்டி வந்தார். தமது தந்தையுடன் அவரது ரசாயனச் சாலையில் ஒத்துழைத்து வந்தார். பின்னர் தமக்குச் சொந்தமானதோர் ரசாயன சாலையொன்று நிறுவினார். தமது நோயின் காரணமாகத் தமது தொழிலை வெற்றிபெற நடத்த இயலாதவர் ஆனார். சிற்சில சமயங்களில் தலையைச்சுற்றி துணியை வரிந்து கட்டிக் கொண்டே தமது காரியாலயத்திற்குச் செல்வார்.

ஆல்பிரட் தாம் இறப்பதற்கு மூன்று வருடங்களுக்கு முன்னர், தமது நட்பிற்குரிய ஓர் பெண்மணிக்குத் தமது உள்ளத்தில் குடிகொண்டிருந்த 'பரிசில்' ஸ்தாபனத்தைப் பற்றி எழுதியிருந்தார். 1893, டிஸம்பர் 10 தேதியன்று சான் ரேமாவில் (இத்தாலி) தமது உயிரை நீத்தார்.

இறப்பதற்குமுன் ரிக்னர் சாலமென் என்பவரை தமது ஆஸ்திகளின் டிரஸ்டியாக ஏற்படுத்தி ஓர் மகத்தான உயில் எழுதிவைத்தார். சில சட்ட சம்பந்தமான அபிப்பிராய பேதங்களால் 1900, நவம்பர் 27-ந்தேதி முதல் தான் சாசனம் அமுலுக்கு வந்தது. இதன் நோக்கம், குறிப்பிட்ட சில காரியங்களுக்கென ஒதுக்கப்பெற்ற தொகை போக எஞ்சியிருக்கும் பொருள்களின்று வரும் வட்டி வருமானத்தை ஐந்து சம பாகங்களாக்கி, அவற்றை ஒவ்வொரு வருடத்திலும், மனித சமூகத்திற்குப் பெரிய சேவை செய்து பின் கூறப்படும் துறைகளில் புகழ்பெற்ற மகான்களுக்கு நன்கொடையாய் 'நோபல் பிரைஸ்' என்னும் பெயரால் வழங்கப்பட வேண்டுமென்பதே. பரிசு ஒவ்வொன்றின் பெறுமானம் 8000 பவுன் ஆகிறது.

நோபல் பரிசுக்குரிய விஷயங்கள்

1 இயற்கை சாஸ்திரத்தில் நிபுணத்துவம்.

2 ரசாயன சாஸ்திரத்தில் நிபுணத்துவம்; நூதனங்களை கண்டு பிடித்தல்.

3 மருத்துவ ஆராய்ச்சியில் மேம்பட்டவர்கள்.

4 தீர்க்கதரிசனத்துடன் கூடிய இலக்கியப் புலமை.

5 உலக சமாதான நாட்டத்தில் உத்தம ஊழியஞ் செய்தவர்கள்.

இப்பரிசில் இன்னோர் விசேடம் என்னவெனின், பரிசை நிர்ணயஞ் செய்யும் உத்தியோகஸ்தர்கள், பரிசுக்குரியவர்களின் சாதி நிற பேதங்களை கவனிக்கலாகாதென்பதே யாகும். பரிசுக்கு உரியவர்கள் 'ஸ்காண்டிநேவியாவின் சுதேசிகளாக விருக்கவேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. சுருங்கக் கூறுமிடத்து நோபல் பரிசின் வரலாறு இதுவேயாகும். 1901-வது வருட முதல் இப்பரிசு கொடுக்க ஆரம்பம் செய்யப்பட்டது.

அல்பிரட் அவர்களது வாசனத்தின்படிச் செய்யப்பட்டுவரும் இவ்வுபகாரத்தை உலகம் எல்லாம் புகழ்ந்து வருகிறது. கீழ்வரும் பெயர்கள் இலக்கியப் புலமைகளுக்காக நோபல் பரிசு பெற்றவர்கள் ஆவார்கள். (1) சாலி பிராட் ஹோம் (2) தியோடோர் மோசேன் (3) ஜோனேசன் (4) ஜியோஸ் காடூஸி (5) கிப்ளிங். (6) சேல்மா லேஜர்லாப் (7) மேடர்லிங் (8) ரவீந்திரநாத் டாகூர் (9) சோமெயின் ரோலந்து (10) ஹென்ரிக் பெனண்டோபிடன் (11) நுட்ஹெம்ஸன் (12) அனடோல் பிரான்ஸ் (13) ஜஸிண்டோ பென்வேண்ட்டி (14) வில்லியம் பட்லர் (15) ஈட்ஸ் லேடிஸ்லோ ரேயெமண்ட், (16) ஜேன் கைல்ஸ்வர்த்தி.

---

**ருக்மணி**

எல்லா காலங்களிலும், சூடும் ஆரோக்கியமுமான சமையலைச் செய்யும் 7 அளவுகள் 1 முதல் 16 பேர் வரைக்கும் ரூ. 9 முதல் 38 ரூபாய் வரை விலையாகும்.

விபர புத்தகம் இனாம்.

**ருக்மணி குக்கர் கம்பெனி,**
ராயபுரம், (10) சென்னை.

ஏஜண்டுகள்

1. வேலூர்:—V. R நாதம் & கோ., லாங் பஜார்
2. சேலம்:—சுதேசி எம்போரியம், (போலீஸ் ஸ்டேஷன் எதிர்.)
3. கோயமுத்தூர்:—பெஞரிஸ் சில்க் எம்போரியம், 115, ராஜவீதி

---



## ஜே. பி. குமாரனுக்கு விவாகம்

ஆற்றங்குடி ஸ்ரீமான் பெ. நா. மு. முத்துப்பழநியப்ப செட்டியார் JP. அவர்களின் குமாரன் திருவளர் செல்வன் ராமநாதனுக்கும் நெற்குப்பை ஸ்ரீமான் ராமசாமி செட்டியார் அவர்கள் குமாரத்தி திருவளர் செல்வி மீனாட்சிக்கும் நானது கார்த்திகை 11 நாள் சாலை சிறப்பாக திருமணம் நடைபெற்றது. மணமகன் நேரே திருமாங்கல்ய தாரணம் செய்தார். பெண்ணும் மாப்பிள்ளையும் கோவிலுக்குச் சென்று தெரிசனம் செய்து வந்தனர். இருதரப்பு சுற்றத்தார் பங்காளிகள் ஏராளமாக வந்திருந்தனர். ஸ்ரீமான்களான பிச்சப்பா சுப்ரமண்யன் அவர்களும்—மு. சின்னையா செட்டியார் அவர்களும், பொ. திரிகூட சுந்தரனாரவர்களும் மணமக்களுக்கு வாழ்த்துக் கூறினார்கள். அதனை ஒட்டி அறிவுரைகள் வழங்கினார்கள். பெண்ணும் மாப்பிள்ளையும் சில வார்த்தைகள் சொல்லி தங்கள் வணக்கத்தை சபையோருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள்.

ஸ்ரீமான் முத்துப்பழநியப்ப செட்டியார் அவர்கள் அனைவருக்கும் வந்தனம் கூறினார்கள். மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டில் தங்கி மூன்று நாட் கலியாணம் செய்தது குறிப்பிடத் தக்கது என ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

---

## மலாய் தூதுக்கோஷ்டி

கல்கத்தாவிலிருந்து புறப்பாடு

இந்திய சர்க்காரின் மலாய் தூதுக் கோஷ்டியைச் சேர்ந்த திரு. வி. எஸ். எஸ். சாஸ்திரி, திரு. ஜீ. எஸ். போஜ்மென்னுடன் நேற்று டில்லியிலிருந்து கல்கத்தா வந்து சேர்ந்தார். அவர்கள் இன்று ரங்கூனுக்குப் புறப்பட்டனர். அங்கு சில நாள் தாமதித்த பின் மலாவுக்குப் புறப்படுவார்கள்.

திரு. வி. எஸ். எஸ். சாஸ்திரியைப் பேட்டி கண்டபோது, தூதுக்கோஷ்டியைப்பற்றி எதுவும் சொல்ல மறுத்து விட்டார்.

---

# என் சுய சரிதை

## (கனம் 'பணம்' எழுதுகிறார்)

நான் எங்கும் நிறைந்தவன், யாரும் விரும்புபவன். யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாகி ஒளிர்பவன். எனக்காக மனிதர் படும்பாட்டை அம்மம்மா! நினைக்கும்போதே அகத்தை கொழுத்து விட்டெரிகிறது. நானிருக்குமிடம் ரணகளம்; இல்லாத இடம் போர்க்களம். என்னைத் தேடி உலகம் நிமிஷத்திற்கு நிமிஷம் படும் பாடு இவ்வளவு அவ்வளவல்ல. சில மனிதன் கடவுள் ஞானம் பெற்றிருப்பதாகவும், உலகில் வேறொன்றையும் விரும்பாததாகவும் சொல்கின்றான்; ஆனால் எல்லாம் சுத்தப்பொய்; நான் ஒருவனே மனிதனின் லக்ஷ்யம். ஹிட்லரும், முசோலினியும், ரூஸ்வெல்டும், இவர்களும் என்னை அடையவே பாடுபடுகிறார்கள். நான் எப்படிப்பட்டவரையும் பிரித்து வைத்துவிடுவேன்; எப்படிப்பட்டவரையும் கூட்டி வைத்தும் விடுவேன். ஆனால் இருக்குமிடம் கத்தி விளையாடுமிடம் தான்; ஆயினும் கத்தியும் நானேயாவேன். ஜாதி பாகுபாடு, பிறப்பினுயர்வு தாழ்வு, பிராமணர் பறையர் பேதம் எல்லாவற்றையும் நொடியில் பறத்தி விடுவேன். எந்த வீரமும், தயாளமும், தியாகமும் எனக்கு பணியாமல் போகா. நான் நினைத்தால் பெரிய சாம்ராஜ்யங்களை நொடிப்பொழுதில் கவிழ்த்தி விடுவேன்.

இப்படிப்பட்ட நான் யார் தெரியுமா? தெரியாதென்றால் அடியில் வருபவற்றை சற்றுப் படியுங்கள்:—

என்னைக் கண்டால் பிணமும் வாய் திறக்கும். நான் இருந்தால் பத்துவிதமும் செய்யலாம். நான் பாதாளம் மட்டும், எட்டி எட்டுமட்டுமே. நானில்லாதார்க்கு இவ்வுலகமில்லை. நான் பக்தியிலே. குலம் குப்பையிலே. நானுண்டானால் மணமுண்டு. முனிவரும், மன்னவரும் உன்னுவ என்னால் முடியும். அடியினை வையத்து மன்னிய மூன்றில் நடுவண் (நான்) எய்த இருதலையும் எய்தும்.

சரி சரி, இந்தக் கடைசிக் கூற்றினால் என் அடையாளத்தை தெரிந்து கொண்டீர்கள். இனி நானே கூறிவிடுகிறேன். நான்தான் ஸ்ரீமான் பணம்.

எனக்கு நிகராக இருப்பார் யார்?

ஏதோ பண்டைக்கால சிந்தனைப் பத்தர் சிலர் துறவிக்கு வேந்தன் துரும்பு என்ற சொல்லினால் என்னை இகழ்ந்தார்கள். அதை எழுத்தளவில்லாமல் செயலில் காணமுடியாது. முசோலினி ஹிட்லர்களிடத்தில் இந்த அடியைச் சொன்னால் உடன் அவ் அடி கன்னத்தில் விழுந்து ஒழுங்கான புத்தியைக் கற்பித்துவிடும். கடவுள் கூட என்னால்தான் மணம் பெறுகிறார். சந்நிதிகளில் தன் பெயருக்கு பணமெதுவுமில்லாமலிருக்கின்றார்களே சில சாமிகள், அவரை யாராவது தீண்டுகிறதா? ஆனால் தினசரி உழக்கு அரிசிக்கு முதலுள்ள சாமியாக விருந்தால் அவர் கதியைப் பாருங்கள்! எத்தனை பேர் ஆதரிக்க வருகிறார்கள். இந்தக் காலத்தில் பெரிய துறவிகள் என்று கூறுபவர்களெல்லாம் உயிர் தாங்கியிருப்பதற்காக எனக்குப் போடும் குட்டிக்கரணத்தைப் பாருங்கள்.



ஏதோ இயேசுநாதர் "Money is the root of evil" என்று சொல்லி என்னை இகழ்ந்தாராம். அதற்கு சரியான பரிசு கிடைத்துவிட்டது. மலை மேலே சிலுவையிடத்தில் கேட்டால் விஷயம் தெரியும்.

இப்படியே என் பிரதாபத்தைக் கூறினால் எல்லையற்றுப் போகும். உலகே என் உருவமாயிருக்க நான் ஏன் என்னைப்பற்றி அதிகம் சொல்லிக் கொள்ள வேண்டும். நிற்க,

நான் இன்று தமிழ்க்கட்டுரையொன்று எழுத வந்து விட்டேனல்லவா? அதனால் என்னை எப்படி நினைத்தாலும் சரி, சில இரகசியங்களை தாராளமாகக் கூறிவிடுகிறேன். தயவு செய்து சற்று இரகசியமாக வாசியுங்கள்.

எனக்கு சொந்தமாக சக்தி எதுவும் கிடையாது. என்னைப் படைப்பவர்களிடமிருந்துதான் எனக்கு சக்தி வருகிறது. அவர்கள்தான் படைக்கிறார்கள். அவர்கள்தான் அதற்கு அடிமை. என்னை மகாவிஷ்ணு கையில் கொடுத்து விட்டார்கள். இதனை நன்கு யோசித்துப் பார்த்தீர்களானால், தற்போதைய உலகை ஆளும் முதலாளித்வத்திற்கு சக்ராயுதம் (நான்) எவ்வளவு தேவை யென்று தெரியும்.

என்னை உலகில் பல வடிவங்களில், பல உலோகங்களில், பல பெயரோடு ஆக்கியிருக்கிறார்கள். நிக்கல், செம்பு, வெள்ளி, தங்கம் ஆகிய உலோகங்களில்தான் முக்கியமாக நான் படைக்கப்படுகிறேன். ஆனால் என் பிரதாபம் ஓசை பெறுவதற்காக கொஞ்சம் கலப்பு மேற்படி உலோகங்களில் இடம் பிடிக்கின்றது.

அமெரிக்கர்கள் முக்கியமாக என்னை டாலராகப் பாவிக்கிறார்கள். கனடா தென் அமெரிக்க நாடுகளிலும், மலாயாவிலும் டாலர் கையாளப் படுகிறது. தமிழ் நாட்டார் அந்த டாலரை வெள்ளி யென்று அழைக்கிறார்கள். டாலர் உண்மையில் Thaler (தாலர்) என்ற ஜெர்மன் பதத்தின் மற்றொரு பேதமாகும். அதனை தங்கத்திலும் வெள்ளியிலும் அச்சிடுகிறார்கள். ஒரு



டாலருக்கு சாமான்யமாக ஆங்கிலேயர் மதிக்கும் விலை (சுமார்) 4 ஷில்லிங்.

ஒரு டாலருக்கு 100 சென்டுண்டு. சென்டை சதம் என்று தமிழில் சொல்கிறார்கள். சதம் என்ற வார்த்தை நூறு என்பதைக் காண்பிப்பதால் மிகப் பொருத்தமான மொழிபெயர்ப்பென்றே கூறவேண்டும்.

இலங்கையில் ஒரு ரூபாயை 100 சென்டாக வகுத்து ஒருவிதக் கணக்கு வைத்திருக்கிறார்கள். அந்த சென்டும் சதம் என்றுதான் அழைக்கப்படுகிறது. காசு என்றும் சொல்வதுண்டு சிலர் இந்த சதத்தையும் மலாய் நாட்டின் ஒன்றரை ரூபாய் பெறுமானமுள்ள டாலரின் 100 லொரு உறுப்பாகிய சதத்தையும் வித்தியாசம் தெரியாது குழப்பி விடுகிறார்கள். இந்த வித்தியாசமெல்லாம் காசின் மதிப்பிலேற்படும் உயர்வு தாழ்வைத் தான் காட்டுகிறது.

இத்தகைய காசு வித்தியாசத்தை தென்னிந்தியாவிலும் காண்கிறேன். திருச்சியில் ஒரு தம்படியை ஒரு காசு என்கிறார்கள். ராமநாதபுரத்தில் 2 தம்படியை ஒரு காசு என்கிறார்கள். புதுக்கோட்டைக்காரர்கள் அரை தம்பிடிக்கு ஒரு காசை சிருஷ்டித்து வைத்திருக்கிறார்கள். திருவாங்கூருக்கு 2 3/8 காசு ஒரு தம்பிடியாகும். ஆங்கிலேயர் இந்த தொல்லையெல்லாம் வேண்டாமென்று கருதி Cash (காஷ்) என்றால் ரொக்கம் என்று பொருள் படுத்திக் கொள்கிறார்கள். அவர்கட்கு எது ஆனாலும் ஆகாவிட்டாலும் வேண்டுவது ரொக்கம்தானே!

இனி, ஜப்பான்காரர்கள் என்னை 'என்' என்றே வழங்குகிறார்கள். ஆங்கிலேயர் என் ஒன்றுக்கு 2 ஷில்லிங் மதிப்பு வைக்கிறார்களாம்.

முசோலினி நாட்டினர் என்னை லிரா என்று வழங்குகிறார்கள். ஒரு லிராவுக்கு இங்கிலீஷ் மதிப்பு 9 பென்ஸ்—அதாவது முக்கால் ஷில்லிங்.

பிரஞ்சுக்காரர்கள் பிராங் என்பதை முக்கிய நாணயமாக கையாடி வருகிறார்கள். ஒரு பிராங்கின் இங்கிலீஷ் மதிப்பு 2 பென்ஸ். ஜெர்மானியரின் நாணயத்தின் பெயர் மார்க். ஒரு மார்க் 1 ஷில்லிங்குக்கு சமம்,

ருஷ்யர்கள் தம் நாணயத்தை ரூபில் என்று அழைக்கின்றனர். ஒரு ரூபிலின் மதிப்பு 2 ஷில்லிங்.

பண்டைய கிரேக்கர்கட்கு டிராக்மா (Drachma) என்று ஒரு நாணயம் இருந்தது. அவர்கள் நாகரிகம்போன போக்கோடு அதுவும் தொலைந்து போயிற்று. இப்போது பிராங்க் என்ற ஒரு நாணயத்தைக் கையாண்டு வருகிறார்கள். கிட்டத்தட்ட அதற்கு $9\frac{1}{2}$ பென்ஸ் மதிப்பு.

இந்தியாவின் நாணயம் ரூபாய் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லையே. கொஞ்ச காலமாக 16 பென்ஸ், 18 பென்ஸ் சண்டை தெருவெல்லாம் சிரிக்கும்படி பரவிப் போயிருப்பதால் நீங்கள் சந்தேகமற ரூபாய் விஷயத்தை தெரிந்திருப்பீர்கள். சிலர் ரூபாயின் மதிப்பைக் குறைப்பதற்காகப் போடும் பாழான சண்டையை யெல்லாம் அரசியல் விடுதலையில் செலுத்தி வருவார்களானால் எந்த தூரையிடத்திலும் கெஞ்சாமலே ரூபாயை நினைத்தபடி ஆட்டி வைத்துவிடலாம். இஃது ஜனாப் ஜயால் மகமது போன்ற என் பக்தர்கட்குத் தெரியாமலிருப்பதற்காக வருந்துகிறேன். போகட்டும்.

பணமாகிய நான் அரூபியென்பதைத் தெரிந்து கொண்டிருப்பீர்கள் அன்றோ? அத்தகைய நான் என்னென்ன வடிவத்தில் யார் யார் என்னை பூசிக்கின்றார்களோ அவரவர்கட்கு அந்தந்த வடிவத்தில் காட்சியளிப்பேன்.

இப்படிப்பட்ட எனக்கு எவ்வாறு முதலில் உருவமுண்டாயிற்று என்று நீங்கள் கேட்கலாம். என்னைத் தொடர்ந்து வாருங்கள் சொல்கிறேன்.

ஆதிகாலத்தில் உலகம் உலகினருக்குச் சொந்தமாகவிருந்தது. எவரெவர் எவ்வளவு தேவைப்படுகிறார்களோ அவ்வளவு வேலை செய்து உலகை அனுபவிக்கலாம். அந்தக் காலத்தில் நான் நாணயமாக உருக்கொள்ளவில்லை. அக்காலத்தைத்தான் பொதுவுடைமைக்காரர்கள் ஒருவகையில் இன்று வேண்டுகிறார்கள். நிற்க,

எல்லோரும் வேலை செய்து காலம் தள்ளினார்களென்று சொல்வதால் எல்லாப் பொருளையும் எல்லோரும் உற்பத்தி செய்தார்கள் என்று கருத முடியாதல்லவா? சிலர், சில சில பொருட்களைத்தானே உற்பத்தி செய்ய முடியும்? அத்தகையார் வேறொருவர் உற்பத்தி செய்த பொருளை வாங்க வேண்டுமானால் என்ன செய்வார்கள்? தம்பொருளைக் கொடுத்து, பதிலாக அவர்கள் உற்பத்தி செய்த வஸ்துக்களை வாங்கிக் கொள்வார்கள், அல்லவா? இந்த பரிவர்த்தனை முறைக்குத்தான் Bartering System (பண்டமாற்று முறை) என்று பெயர்.

இந்த பண்டமாற்று முறை எப்போதும் சாத்தியமல்ல. ஒரு தேங்காயைக் கொடுத்து மாங்காயை வாங்கிக்கொள்ளலாம். தங்கத்தைக் கொடுத்து வெள்ளியை வாங்கலாம்; ஆனால் சில யைல்நா மிருப்பவர்களிடம் ஒரு வீட்டைக்கொடுத்து விட்டு, பதிலாக ஒரு பாறையை வாங்கிவர முடியுமா? முடியாதல்லவா? காரணம் இரு பொருட்களும் அசைக்க முடியாதவை; இலகுவாக தூக்கி எடுத்துக்கொள்ள முடியாதவை.

இப்படிப்பட்ட தருணங்களில் பரிவர்த்தனை முறைக்கு இலேசாகக் கையாடத்தகுந்த பொருட்கள் ஏதேனுமிருந்தால் நலமென்று மனித வருக்கத்துக்குத் தோற்றிற்று. ஆகவே காலடைவில், மனித நாகரிக வளர்ச்சியில் எனக்கு சங்கேதமாக சில பொருட்கள் உற்பத்தியாகத் தொடங்கின. அச் சங்கேதப் பொருட்கள் தான் நாணயங்கள்.

நாணயம் உற்பத்தியான ஆரம்ப காலத்தில் கடற்சிப்பிகளை நாணயமாக உபயோகித்தனர். சிலர் வேறு பொருட்களை உபயோகித்தார்கள்.

• • •

மேனாட்டின் பூர்விக சரித்திரத்தை ஆராய்ந்தால் நல்ல வேளையாக முதன் முதலில் நாணயம் அங்கு கண்டு பிடிக்கப்படவில்லை என்பது வெளியாகும். ஆசியா மைனரில் லிடியா என்ற இடத்தில்தான் முதலில் எனக்கு நாணய

உருவம் தந்தார்கள். அங்கிருந்து கிரீசைச் சேர்ந்த பீடன் என்ற அரசன் தன் நாடாகிய ஆர்கோசில் நாணய முறையைப் புகுத்தினான். மெல்ல கிரீஸ் முழுதும் பரவியது. ஸ்பார்ட்டா என்ற கிரேக்க தேசம் பழைமைக்குப் பெயர் போன இடம். அங்குள்ள சர்க்கார், தங்கம் வெள்ளிகளில் நாணயத்தைச் செய்தால் சூழ்ச்சிக்காரர்கள் தந்திரமாக அவற்றைச் சேகரித்துப் பதுக்கி வைத்துக்கொண்டு, நாட்டின் பொருளாதார நிலைமையை தொலைத்து விடுவார்கள் என்று நினைத்து, சுத்த இரும்பில் நாணயங்களை ஆக்கினர். இரும்பு நாணயமென்றால் எனது தற்காலத்திய வெள்ளி, தங்க உருவங்களை நினைத்து விடாதீர்கள். பெரிய பாளங்களே ஸ்பார்ட்டன் இரும்பு நாணயமாம்.

இவ்வாறு ஸ்பார்ட்டா அச்சிட்ட நாணயங்களை மற்ற கிரேக்க தேசங்கள் ஒப்புக் கொள்ளவில்லை. அவைகள் அழகான வெள்ளி, தங்க நாணயங்களை தம் மக்களிடையே வழங்கின.

அந்த நாணயங்களில் பிரக்யாதி பெற்றது ஆந்தை நாணயம். அதனைக் கையாண்டோர் அதீனியன் சாம்ராஜ்யக்காரர்களாவர்.

இதே சாம்ராஜ்யத்தில் வெங்கல நாணயங்களும், வெள்ளி பூசப்பெற்ற வெங்கல நாணயங்களும் கிருஸ்துவுக்கு முன்பு 404ல் அதாவது இற்றைக்கு 2340 வருடங்கட்கு முன்பு உபயோகிக்கப்பட்டன.

ஆஸ்யா மைனரின் வடகோடியில் நான் எலக்டரம் (வெள்ளி தங்கம் இரண்டும் சேர்ந்த ஒருவிதக் கலவை) என்ற உலோகத்தில் அவதாரமெடுத்திருந்த அதிசயத்தையும், இரும்பு நாணயமாக சின்னாள் திருவிளையாடல் புரிந்த ஆச்சரியத்தையும் தொன்மை ஆராய்ச்சிக்காரர்கள் கண்டு பிடித்து இந்நாள் உலகுக்குத் தருகிறார்கள். ஒரு வகையில் இஃது என் பூர்வீக வாழ்க்கையின் மாற்றைக் கம்பிப் படுத்துகிறதல்லவா?

இந்நாள் நான் காகித வடிவிலும் உங்கள் முன் உலாவுகிறேன். அவ்வடிவத்தை நோட் என்று வழங்குகிறீர்கள். அந்த நோட்டுக்கும், கடன் பத்திரங்கள், புரோ நோட்டுகள், 'அண்டிமன்'கள் ஆகியவற்றிற்கும் அதிக வித்தியாசமில்லை.

காகித நாணயங்களை ஆங்கிலேயர் தான் பழக்கத்திற்குக் கொண்டு வந்தார்கள் என்று யாரோ சொல்லக் கேட்டேன். அது தப்பு. மகமத் பின் துக்ளக் என்ற டில்லி அரசன் என்ன செய்தான் தெரியுமா? நல்ல தோலில் நாணயங்களை அச்சிட்டு வெளியிட்டான். அக்கால மக்கள் (மூளை வளர்ச்சி குன்றி யிருந்ததால்) ஆக்ஷேபித்தார்கள்.

இதற்குள் ஒன்று சொல்லியாக வேண்டும். நீங்கள், "ஐயா பணக் கனவானே! நீர் முற்காலத்தில் உலோகமாக நடமாடவில்லை யென்கின்றீரே; அதற்கு ருஜு என்ன?" என்று கேட்கலாம். நானே என்னைப்பற்றிச் சொல்லும்போது வேறு ருஜு எதற்கு? எனினும் வஞ்சம், கபடம், சூது நிறைந்தவர்களாகிய மனிதப் பிராணிகளோடு நான் பழகவேண்டியிருப்பதால் ருஜுவும் கொடுத்து விடுகிறேன். ரோம பாஷையில் என்னை பெகுனியா (Pecunia) என்று அழைக்கிறார்கள். பெகுனியா, பெகுடோ (Pecudo) என்ற பதத்திலிருந்து பிறந்தது. பெகுடோ வென்றால் மாட்டு மந்தை என்பது பொருள். இந்த ஒரு ருஜு போதாதா? போதாதென்றால் Salary (சாலரி) என்று சம்பளத்தைக் குறிக்கும் பதமிருக்கிறதே, அதைப் பாருங்கள். சாலரி, ஸால் (Sal) என்ற பதத்திலிருந்து வந்திருக்கிறது. ஸால் என்பது (Salt) உப்பு. ஆகவே உப்பும் ஒரு காலத்திலும் சம்பளமாக உபயோகிக்கப்பட்டதென்று புரிகிறதல்லவா?

நான் உப்பாகவும், மாட்டு மந்தையாகவுமிருந்து இப்போது காகிதமாக மாறி வந்திருக்கிறேன். இன்னும் மனித மூளை மிக மிக, என்னை யெப்படியெல்லாம் உருக்குலைக்கப் போகிறார்களோ?—பொதுவுடமை வாதிகள் நாணயங்களே வேண்டாம் என்ற நிலைமைக்குக்கூட வரப் போகிறார்களாம். யார் என்ன செய்தாலும் நான் ஒப்புயர்வற்றவனே. மனிதவாழ்வுக்கு இன்றியமையாதவன் நான்தான். எங்கும் நிறைந்தவனும் யாதிலும் ஊறி நிற்பவனும் நானே. நானில்லாதார்க்கு இவ்வுலகமில்லை!

## ராவ்பகதூர் ராமநாதஞ் செட்டியார்

### பட்டத்தை விட்டார்

நவம்பர் 27-ந் தேதி தஞ்சை நகரசபையின் கூட்டமொன்று நடைபெற்றது. அதில் ராவ்பகதூர் S. RM. ராமநாதன் செட்டியார் தமது பட்டத்தை துறந்து விட்டதாக அறிவித்தார். அன்றி காங்கிரசில் உழைக்கப் போவதாகக் கூறி ஒரு கடிதத்தை பாட்ஜ், சன்னதிகளுடன் வைசிராய்க்கு அனுப்பியுள்ளார்.

30-ந் தேதி காலையில் நடைபெற்ற கூட்டமொன்றுக்கு திரு. செட்டியார் காந்திக் குல்லாயுடன் வந்திருந்தார். அவரை ஏகமனதாக சேர்மனாகத் தேர்ந்தெடுத்தார்கள்.

### சா. கணேசன் வாழ்த்து

காரைக்குடி திரு. சா. கணேசன் தந்தி மூலம் பின்வருமாறு அறிவிக்கிறார்:—

தஞ்சை நகர சபைக்கு சேர்மனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் காரைக்குடி திரு. எஸ். ஏ. எஸ். ஆர். எம். ராமநாதன் செட்டியார் நவம்பர் 14உ கோவிலூரில் நடைபெற்ற 96 நகரத்தார்கள் மகாநாடு ஒன்றில் நிறைவேற்றப்பட்ட தீர்மானப்படி தமது ராவ்பகதூர் பட்டத்தை துறந்தது எனக்கு பெரிதும் மகிழ்ச்சியைத் தருகிறது. நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்திற்கு இவர்தான் கௌரவ காரியதரிசி. ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் தலைவர். இந்த சங்கம் சமீபத்தில் நடைபெற்ற ராமநாதபுரம் ஜில்லா போர்ட் தேர்தல்களில் காங்கிரசுக்கு எதிராக அபேட்சகர்களை நிறுத்தியது. ஸ்ரீ ராமநாதன் செட்டியார் எப்போதுமே ஒரு காங்கிரஸ் அநுதாபி. பட்டத்தைத் துறக்க முன் வந்தது பற்றி அவர் வாழ்த்துக்குரியவராவர். ஜில்லாவின் பிரஜைகள், குறிப்பாக நகரத்தார்கள் திரு. ராமநாதன் செட்டியாருக்கு வாழ்த்துகள் கூறுவதுடன் காங்கிரசுக்கும் அவரை வரவேற்கின்றனர்.



# காந்திஜீயின் புகழ் ஒளி

## உலக யாத்ரீகர்கள் கண்ட உண்மை

இந்திய வர்த்தக சங்கத்தின் மாஜி தலைவரான திரு. லால்ஜீ மெரோத்ரா சென்ற எட்டு மாத காலமாய் உலகத்தைச் சுற்றிப் பிரயாணஞ் செய்துவிட்டு இந்தியாவிற்குத் திரும்ப வந்திருக்கிறார். அன்னவர் கீழ்வருமாறு தெரிவிக்கிறார்:—

"மகாத்மா காந்தியின் பெயர் உலகெங்கணும் பரவியிருப்பதைக் கண்டேன். வண்டியோட்டி, வீட்டு வேலைக்காரிகள், பாதிரிகள், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் முதல் கலாசாலைப் போசிரியர்கள் வரையிலும், அவரவர் நாட்டைக் காண வரும் இந்தியர்களிடம் "தாங்கள் காந்தியின் தேசத்திலிருந்துதானா வருகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள். அரசியல் கொள்கையிலும், நீதி ஆசாரங்களிலும், அவருடன் மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டிருப்பவர்களும் "காந்திஜீயின் பெயருக்கு விசேஷ மரியாதையும், ஆதரவும் அளிக்கிறார்கள்.

* * *

சமீபத்தில் வார்தாவுக்குச் சென்று காந்திஜீயைப் பேட்டி கண்ட ஜப்பானிய ஆசிரியராகிய யோன் நகுசி என்பவர் "காந்திஜீ தாம் செய்வதற்கென ஏற்றுக்கொண்ட கடமை எவ்வளவு பெரிது!" என ஆச்சரியமடைந்தாராம். அவர் கூறியதாவது:—

"காந்திஜீ தமது அஹிம்சா தர்மக் கொள்கைகளால் அரசியலில் அன்பு வாழ்க்கையைப் புகுத்த முயன்றார். அவர் பிரிட்டிஷ் மக்களை மட்டிலும் வேண்டிக்கொள்ளவில்லை. உலக முழுதையுமே அறைகூவி அழைத்து, அன்பு வாழ்க்கை மண்ணுலகத்திற்குப் பொருத்தமற்றதோர் சாதனமாய் விட்டதோ என்று வினவுகிறார்?

"போராட்டத்தை நெருக்கிக் கொண்டே வந்தார் என்பது உண்மைதான். ஆனால் அவர் நிறுவிய உலகத்தை ஆத்மீக வெற்றிக் கொண்ட உலகமென்றே அழைக்கவேண்டும். அரசியற் போராட்டத்தை நீக்கிப் பார்ப்போமாகில், ஆதிஅந்தமற்றதோர் தெய்வீக சாம்ராஜ்யத்தில் கலந்து கொண்டவராய்த் திகழ்கிறார். ஆங்கிலக் கவியாகிய 'பிரவுனிங்'இன் 'பெட்ரியட்'டைப் போல் உலகத்திலிருந்து தாம் பெற விரும்புகிறவற்றை ஆண்டவனிடமிருந்து எதிர்பார்க்கிறார்."

* * *

அமெரிக்க, பாஸ்டன் சர்வகலாசாலைப் போசிரியரான பேசில் மதயான் கல்கத்தாவில் பத்திரிகை நிருபர் ஒருவருக்குப் பேட்டியளித்தபோது குறிப்பிட்டதாவது:—

"அரசியல், பொருளாதாரத் துறைகளில் இந்தியா, பலாத்காரத் தன்மையுடையதோர் புரட்சி மனப்பான்மை விடுத்து, ஆக்கத்தை நல்கும் சாத்வீக முறையில் புரட்சி உண்டுபண்ண விரும்புகிறது."

"ஜர்மனிக்கு ஓர் ஹிட்லரும், இத்தாலியாவுக்கு ஓர் முசோலினியும், அமெரிக்காவுக்கு ஓர் ரூஸ்வெல்டும் இருக்கிறார்கள். ஆனால், காந்தி, ஜவஹர், தாகூர் போன்ற மும்மணிகள் ஒருங்கே வாய்க்கப்பெற்றதோர் தேசத்தை வேறெங்கே காண்போம்."

"சென்னை மாகாணத்தைச் சார்ந்த திருவாங்கூர், திருநெல்வேலி, முதலான பல பாகங்களிலும் பிரயாணஞ் செய்தேன். கிராமவாசிகள் அறியாமையுள் மூழ்கியிருந்தபோதிலும், அவர்கள் ஓர் சிறந்த எதிர்காலத்தை பெறும் உறுதியான நோக்குடன் தலை நிமிர்ந்திருப்பதைக் கண்டேன்."

அதற்கு அநுகூலமாகக் காணும் சாதனங்கள்:— காந்திஜீயால் நிறுவப்பெற்று கிராமாந்திரங்களில் எல்லாம் கிராமப் புனருத்தாரண வேலைகளைச் செய்து வரும் அகில இந்திய ஹரிஜன சேவா சங்கம்.

தேர்தல் பிரசாரங்களுக்கென கிராமாந்திரங்களுக்குப் பல்லாயிரக்கணக்கில் மக்கள் செல்வதால் கிராமவாசிகள் புது உணர்ச்சி பெற்று வருவது.

இலக்கிய மறுமலர்ச்சியும் பெண்களுக்கிடையே காணப்படும் சுதந்திர உணர்ச்சியும்.

இறுதியில் பண்டித ஜவஹரின் அரசியற் கொள்கையைப்பற்றிக் கூறும் போது ஜவகர் தற்போது தாக்குவது "பிரிட்டனையோ மேலைத் தேசங்களையோ அல்ல. ஏகாதிபத்தியத்தையும், முதலாளித்துவத்தையுமே அவர், கீழ் நாடு மேல் நாடு என்ற வேறுபாடில்லாமல் பகைத்து வருகிறார்" என்றார்.

---

சமீபத்தில் நடைபெற்ற மைசூர் சர்வகலாசாலை, செனட் கூட்டத்தில் ஹிந்தியை விருப்ப பாடமாக கலாசாலை கரிக்குலத்தில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டுமென்ற தீர்மானம் ஆலோசிக்கப்பெற்று நிறைவேறியது.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

## பிரஞ்சு யுத்த வண்டிகள்

ஜெர்மன் எல்லைப்புறத்திற்கும் மத்திய தரைக் கடற்கரைக்கும் பறந்து செல்ல தயாராயிருப்பதிலிருந்து, பிரான்ஸ், எதிர்ப்பைச் சமாளிக்கவே ஆயத்தம் செய்கிறதென்று தெரிந்து கொண்டேன். இது விஷயத்தில் எனக்கு பரம சந்தோஷம். பிரான்ஸ் சர்க்கார் வாழ்கவென்று அனுக்ரகித்துவிட்டு ஸ்விட்ஜர்லாந்தை நாடினேன்.

## பாவம் ! ஜினீவா

சர்வதேச சங்கம்! மருள மருள விழிக்கிறது. மூக்கிலிருந்து எட்டு மைலுக்கு பெருமூச்சுப் பாய்கிறது. உடல் நடுக்கம் பொறுக்க முடியவில்லை. "அடிக்கடி சோதனை வந்துவிடுகிறதே; அந்த அபிசீனியாவோடு கஷ்டம் தொலைந்தது என்றல்லவா எண்ணிக் கொண்டிருந்தேன்! டிசம்பர் 10-ஐ எப்படி சமாளிப்பது?" என்று அதன் தலைக்குள் ஒரு சுழல்காற்று வீசி கொண்டிருந்தது. இந்த நிலை எனக்கு சிரிப்பையும் வருத்தத்தையு முண்டு பண்ணிற்று.

## பிறகு நேராக

ஜெர்மனியை நோக்கி பறந்தேன். பறந்து எல்லையைக் கடந்ததும், அம்மா! நான் கண்டது உண்மையா? ஆட்டு மந்தைபோல் யுத்த மோட்டார்கள், டாங்குகள், கப்பல்கள், மேலே பார்த்த துப்பாக்கிகள்! அங்குள்ள மக்களெல்லாம் மேலே பார்த்து வாழ்பவர்கள் போலிருக்கிறது!

## என்னைக் கண்டதும்

"ஏய்! நில். யார் நீ? எங்கள் தலைவர் சில தினங்கட்கு முன் போட்ட உத்தரவு ஞாபகமிருக்கிறதா?" என்ற தொனியைக் கிளப்பினர். "சில தினங்கட்கு முன் ஆற்றில்தானே எவரும் போகக் கூடாது என்றார்" என்று சொல்ல வாயெடுத்தேன். அதற்குள்ளாக, "ஒற்றன்; துஷ்டன்; விதேசி" என்று கூறிக் கொண்டு வந்து விட்டார்கள் ஓராயிரம் பேர். 'அட ராமா! இதென்ன ஜெர்மனி! சந்நியாசிகட்கும் தடையா?' என்று கூறியவாறே எழும்பினேன் மேலே. என்னைத் தூக்கிற்று இறக்கையில்லா ஒரு விமானம். நான் 8 மைல் எழும்பி, மணிக்கு 500 மைல் வேகத்தில் பறந்து ஆஸ்திரியாவுக்குள் புகுந்தேன்.

## அங்கும்

யுத்த மேகத்தின் அமளிதான். ஆயுதங்கள் செய்யப்படுகின்றன. அவைகளெல்லாம் மற்ற தேசங்களை போலில்லாததால் நான் மெல்ல ஷூஸ்னிக் அரண்மனைக்குச் சென்றேன். ஷூஸ்னிக் ஒரு பொம்மைச் சர்வாதிகாரியல்லவா? முசோலினி சொல்லுக்கும் ஹிட்லர் சொல்லுக்கும் ஆடவேண்டுமே! ஆதலால் அவர் விஷயத்தில் எனக்கு ரொம்பக் கவலை.

## அவரது

அரண்மனையை நான் அடைந்த போது அவர் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு சங்கடப்பட்ட வண்ணம் உட்கார்ந்திருந்தார். கண்கள் பூமியை நோக்கிக் கொண்டிருந்தன. எனவே நான் மெல்ல என் 'விசிடிங் கார்டை' வேறொரு உத்யோகஸ்தரிடம் கொடுத்து பேட்டி வேண்டினேன். அவர், 'பத்திரிகைக்காரர்கள் தொல்லை பொறுக்க முடியவில்லை' என்று கூறிக் கொண்டு, 'பேட்டி இல்லை' என்றார். நான் சந்நியாசி; என்னை தெரியாமல் அவர் பத்திரிகைக்காரர் என்றார். ஆகவே பக்கத்தில் நின்ற பியூனிடம் 'என்ன இவ்வளவு எரிச்சல்' என்றேன். அவன் சொன்னதாவது:—

"ஜெர்மனியும் ஜப்பானும் ராணுவ உடன்படிக்கை செய்து ருஷ்யாவை அழிக்கப் பார்க்கின்றனவல்லவா? அதில், நான் சேர முடியாது என்று ஷூஸ்னிக் சொல்லி விட்டார். சொன்னதில் அவருக்கு அளவிலாத கவலை. அதுதான் எல்லா உத்யோகஸ்தர்களும் எரிந்து விழுகிறார்கள்" என்றான்.

அப்பால் நான் அங்கு நிற்கவில்லை. நாராயண நாமத்திற்குப் பதில் ஜெர்மனி—ஜப்பான் உடன்படிக்கையை தியானித்துக் கொண்டு நேராக ருஷ்யா நோக்கி நடந்தேன். வழியில் ஒரு கடையில், விற்ற பத்திரிகை யொன்றை வாங்கினேன். அதனைப் பிரித்ததும் அடியில்வரும் விஷயம் இருந்தது:—

## ஜெர்மனிக்கு எச்சரிக்கை

நவம்பர் 30-ந் தேதி மாஸ்கோவில் நடைபெற்ற அகில சோவியத் காங்கிரஸில் ஆகாயப்படையின் உதவித் தளகர்த்தரான கிப்ரின் பேசியதன் சாரமாவது:—

"ருஷ்யாவிலுள்ள ராணுவ விமானிகளின் தொகை இவ்வருஷம் ஒரு லக்ஷமாகப் பெருகும். சக்தியிலாகட்டும், அளவிலாகட்டும் சோவியத் விமானப்படையை மிஞ்சக்கூடிய படை உலகில் எங்குமில்லை. விமான உற்பத்தி இருமடங்காகியிருக்கிறது.

நம்மிடம் நூற்றுக் கணக்கான விமான நாசகாரிகள் இருக்கின்றன. அவை மணிக்கு 360 மைல் வேகத்தில் செல்லக்கூடும். நமது விரோதிகளை பின் புறத்திலிருந்து தாக்க, எந்த சமயத்திலும் பத்து நிமிஷ நேரத்திற்குள் விமானங்களிலிருந்து 'பாரசூட்' வசதி மூலம் ஆயுதந் தாங்கிய நூற்றுக்கணக்கான துருப்புகளைக் கீழே இறக்கக்கூடும். ஜெர்மானியர் ருஷ்யாவைத் தாக்குவராயின் அவர்கள் அழிந்தொழிய வேண்டியதுதான்."

இது உண்மையான பேச்சு என்பது என் அனுபவ ஞானம். ருஷ்ய விமானப்படை எல்லையற்ற சக்திகொண்டது. பெண்கள்தான் பெரும்பாலும் விமான ஓட்டிகள். பாரசூட் என்ற குடைகளின் உதவியால் மூன்று மைல் உயரத்திலிருந்துகூட குதித்து விடுவார்கள். இத்தகைய சக்தியொருபா லிருக்க, சோவியத் ருஷ்யாவுக்கு எல்லா தேசத்திலும் உதவி புரியும் தொழிலாளர் கட்சிகள் இருக்கின்றன

